KALKI 26-8-84

ரூ 1-50

சென்னைக் கடற்கரை சீரடையுமா?



# கல்கி

புதியது

# பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

## அதிக சுவையானது
## அதிக முழுமையானது




**நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும் உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.**

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. இதைக் கலப்பது எளிது. பாப்பாவுக்கு ஊட்டுவதும் எளிது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. பாப்பாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதம் நிரம்பியது. மிக ஆரோக்கியமான இரத்தத்திற்குக் கூடுதல் இரும்புச்சத்து கொண்டது. உறுதியான பற்களையும் எலும்புகளையும் பெற சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. பாப்பாவின் மென்மையான ஜீரணசக்திக்கென முன்கூட்டிப் பக்குவம் செய்தது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. ஒவ்வொரு கவளத்திலும் அதிக முழுமையான திட உணவு.

## அலசல்

**இலங்கையில் தமிழ் மக்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளுக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் விதத்தில் தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் மாணவர்கள் ஊர்வலங்கள் ஆர்ப்பாட்டங்கள் நடத்துகிறார்கள். இதுபற்றிப் பொது மக்கள் சிலர் கருத்து சொல்கிறார்கள்.**

# கோவை ஸ்டேஷன் அழிந்தால் ஈழத் தமிழர் பிழைப்பாரா?

**திருமதி கீதா முரளி:**

இலங்கையில் நடந்து கொண்டிருப்பது மிகவும் வேதனைக்குரியது. அவர்களுக்கு நம் அனுதாபத்தைக் காட்ட வேண்டியதுதான். ஆனால் எப்படி அதைக் காட்ட வேண்டும் என்பதிலே வரைமுறை இருக்கிறது. அங்கே படுகொலை, கொள்ளை நடக்கிறது என்பதற்காக, நாம் இங்கே ஊர்வலங்களும், ஆர்ப்பாட்டங்களும், நடத்தி, கல்லெறிந்து, நம் சொத்துக்களையே பாழாக்கிக் கொள்வதில் யாருக்கு என்ன பிரயோஜனம்? இது இலங்கைப் பிரச்சினைக்கு முடிவு காண எந்த விதத்தில் உதவும்? இலங்கைப் பிரச்சினையைக் காரணமாய்ச் சொல்லி நம் சொத்துக்களையே அழித்துக் கொள்ளும் இவர்கள் நடவடிக்கைகளை ஒரே வார்த்தையில் விமர்சிக்க வேண்டுமெனில் 'பயித்தியக்காரத்தனம்.'



கீதா முரளி

**திரு. சந்திரசேகர்:**

நம் அப்பாவிச் சகோதரர்கள் அங்கே படுகொலை செய்யப்படுகிறார்கள். அதை வேடிக்கை பார்த்துக் கொண்டு நாம் சும்மா இருக்க முடியுமா? அரசியல் கட்சிகள் தம் எதிர்ப்பை ஒருபுறம் தெரிவித்துக் கொண்டிருக்கையில், மாணவர்களும் தம் பங்கைச் செய்திட நினைத்து ஊர்வலம் போகிறார்கள்; இது எந்த ஒரு மனிதாபிமான முள்ளவனுக்கும் எழுகிற உணர்வு. எல்லோருமாய்க் கூடி, உரத்த குரலெழுப்பினாலாவது இலங்கைத் தமிழ் பிரச்னைக்கு ஒரு நல்ல காலம் பிறக்காதா என்கிற ஏக்கத்தின் வெளிப்பாடுகளே இவை எல்லாம். ஆனால் இந்தச் சந்தர்ப்பங்களைச் சமூக விரோதிகளும் நாலாந்தர அரசியல்வாதிகளும் தமக்குச் சாதகமாய்ப் பயன்படுத்திக் கொண்டு விடுகிறார்கள். இல்லாவிட்டால் சென்னையில் அமைதியாகப் போய்க் கொண்டிருந்த மாணவர் ஊர்வலத்தின் மீது கல்வீச்சு நடைபெற்றது எதனால்? இதன் விளைவாகத்தான் மாணவர்கள் சீற்றமடைந்து பொதுச் சொத்துக்களை அழிக்க முற்பட, போலீஸ் தடியடிப் பிரயோகமும் நடந்தது. இதில் மாணவர்களை மட்டும் குறைகூறுவது சரியில்லை.



சந்திரசேகர்

**திரு. சந்திரசேகரன்:**

வன்முறையினால் எந்தப் பிரச்சினைக்கும் தீர்வு காணலாம் என்பது தவறானது. இது இலங்கைப் பிரச்சினைக்கும் பொருந்தும். இது கூடத் தெரியாமல் மாணவர்கள் நடந்து கொள்வது வருத்தத்துக்குரிய விஷயம். கோயமுத்தூர் ரயில்வேஸ்டேஷனில் ஏராளமான மாணவர்கள் புகுந்து, ரயில் பெட்டிகளையும் ரயில்வே ஸ்டேஷனின் சில பகுதிகளையும் நாசப்படுத்தியுள்ளனர். ரயில்கள் ஓடவிடாமலும் செய்திருக்கிறார்கள். லட்சக்கணத்தில் சொத்து நஷ்டம். இப்போக்கைக் கண்டிக்க வேண்டும் என்பதில் கருத்து மாறுபாடு ஏது? சென்னையிலும் பொதுச் சொத்துக்களை நாசம் செய்திருக்கிறார்கள். நம் மாணவர்களுக்கு அவ்வப்போது கலாட்டா செய்ய ஏதாவது காரணம் வேண்டும். இப்போது இவர்கள் கையில் சிக்கிக்கொண்டிருப்பது இலங்கைத் தமிழர் பிரச்னை. அமைதியாகச் சண்டனை ஊர்வலம் நடத்தும் மாணவர்கள் மீது கல்லெறிந்து அவர்கள் ஆத்திரத்தைக் கிளப்பியதாகக் கூறுவது சரியான சமாதானமாகாது. அப்படித் தூண்டி விடப்பட்ட போதிலும் நிலை தவறாமல் அமைதி காப்பவரே பாராட்டுக்குரியவர்கள்... அந்த மனஉறுதி இல்லாதவர்கள் ஊர்வலமே போகக் கூடாது.



சந்திரசேகரன்

கருத்து தொகுப்பு: ஜூலி

# காற்று வாங்கப் போனேன்

**கோ**ல்டன் பீச் முட்டுக்காடு பீச் பக்கங்களில் ஜனசந்தடி அதிகமில்லாத, இயற்கையின் கன்னித்தன்மை மாறாத கடற்கரைப் பகுதிகளுக்கு கார் வசதியுள்ள செல்வந்தர்கள் போய்க் காற்று வாங்க முடியும். ஆனால் நெருக்கடியான தெருக்களிலும், ஒண்டுக் குடித்தனங்களிலும் வாழும்சென்னை நகர நடுத்தர மக்களுக்கு, இயற்கைக் காற்றை அனுபவிக்க உள்ள ஒரே இடம் சென்னை மெரீனா கடற்கரைதான். சமுதாயத்தில் பெரிய மனிதர்களாக உள்ள பலருக்குக் காலைவேளைகளில் ஓட, நடக்க என்று பல்வேறு உடற்பயிற்சிகள் செய்யவும் இந்தக் கடற்கரை பயன்படுகிறது.

காந்தி சிலையிலிருந்து, அண்ணா சதுக்கம் வரை உள்ள கடற்கரைப் பகுதிதான் மெரீனா என்று அழைக்கப்படுகிறது. உலகிலேயே இரண்டாவது (ஒரு காலத்தில்) அழகான கடற்கரை இன்று எப்படி இருக்கிறது?

காலை ஐந்திலிருந்து ஏழு மணிக்குள்... உழைப்பாளர் சிலையிலிருந்து நடக்கத் துவங்கினால், (கடல் மணல் ஓரமாக உள்ள சாலையில் தான்) எதிரே பலர் (பெரும்பாலும் நாற்பதுக்கு மேல்தான்) ஓடி வருவதைப் பார்க்கிறோம். சிவராமன் ஒரு பெரிய கம்பெனியில் ஸேல்ஸ் மேனேஜர். மூச்சு முட்ட ஓடிவரும் அவரைத் தடுத்து நிறுத்தி, ''காலை வேளைகளில் கடற்கரைக்கு வருகிறீர்களே, உடற்பயிற்சி செய்யக் கூடிய அளவுக்குச் சூழ்நிலை நன்றாக இருக்கிறதா?'' என்று கேட்டோம்.

''சென்ற ஐந்து வருடங்களாக இங்கு வந்து கொண்டிருக்கிறேன். சமீப காலங்களில் சாலையின் இரண்டு பக்கங்களிலும் பார்க்காமல் தான் ஓட வேண்டி இருக்கிறது. சற்று கண்ணை மூடிக் கொண்டு ஓடினால் எருமை மாடுகளின். மேல் மோத வேண்டி இருக்கும். கடற்கரை எதிரில் உள்ள குப்பங்களில் உள்ளவர்கள் தங்கள் எருமைகளைக் கடலில் குளிப்பாட்ட ஓட்டிக் கொண்டு செல்கிறார்கள். துர்நாற்றம் வேறு'' என்று சொல்லிவிட்டு ஓட்டத்தைத் தொடர்ந்தார் அவர்.

தொடர்ந்து நடக்கிறோம்...

மரங்கள் செடிகளிடையே அந்தக் காலை வேளையில் விற்கப்படும் கள்ளச் சாராயத்தைக் குடித்து விட்டுச் செல்லும் மீனவர்களைப் பார்ப்பதற்கு வேதனையாக இருக்கிறது.

சிறுவர்கள் கும்பலாக உட்கார்ந்து சீட்டு விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.




## மெரீனா சீரடையுமா?

மெரீனா நீச்சல் குளம் பக்கத்தில் திடீரென்று மணல் பகுதிகள் மறைந்து புல்வெளியும், சதுப்பு நிலங்களும் தென்படுகின்றன. இதை ஒழுங்கு படுத்தக்கூடாதோ? கண்ணகி சிலைக்குப் பின்னால் சின்ன குடிசைகள் முளைத்து இருக்கின்றன. இன்னும் பெருகி ஆளும் கட்சியின் கொடி நடப்படுவதற்குள் அரசு விழித்துக் கொண்டால் சரி. சீரணி அரங்கத்திலிருந்து காந்தி சிலை வரை சென்னைக் குடிநீர் வாரியம் கடற்கரையில் ஏகப்பட்ட கிணறுகளைத்தோண்டி வைத்திருக்கிறது. (சென்ற வருட தண்ணீர் பஞ்சத்தின் போது தோண்டப்பட்டதாம்.) கடற்கரை எதிரில் உள்ள மக்களுக்குக் குடிக்க, குளிக்க, இத்யாதிக்கு இந்த கிணற்று நீர் தான் பயன்படுகிறது. இரண்டாண்டுகளுக்கு முன், சரியாக மூடப்படாத ஒரு கிணற்றில் விழுந்து இறந்த சிறுவனின் ஞாபகம் வருகிறது. காலை வேளைகளில் கடற்கரையில் நடப்பவர்களுக்கும் ஓடுபவர்களுக்கும் மற்றொரு தொந்தரவு, கார், ஸ்கூட்டர் ஓட்டக் கற்றுக் கொள்பவர்கள் தான்.

பகலில் மெரீனா கடற்கரை நன்றாகப் பயன்படுகிறது - மீனவர்களுக்கு. ஆங்காங்கு காய வைக்கப்பட்டிருக்கும் மீன்கள் நல்ல மணத்தை(?) அள்ளி வீசுகின்றன.

மெரீனாவில் பயப்படாமல் காற்றுவாங்கச் சிறந்த நேரம் மாலை நாலு மணி முதல் இருட்டும் வரை. அதற்கப்புறம் — உங்களை நீங்களே பாதுகாத்துக் கொள்ள வேண்டியதுதான். காந்திசிலை அருகிலும், கண்ணகி சிலை அருகிலும், சில விளக்குகள்

எரிவதோடு சரி. பெரும்பாலான பகுதிகள் இருளில் மூழ்கிக் கிடக்கின்றன. இருட்டியதற்கு அப்புறம் கடற்கரையில் தண்ணீர் அருகில் செல்பவர்கள் மிகவும் குறைவு. சாலையின் ஓரத்திலேயே உட்கார்ந்து காற்று வாங்கிக் கொண்டு போய் விடுகிறார்கள். கடற்கரை உட்புற சாலையில் போடப்பட்டிருக்கும் விளக்கு ஒன்று கூட எரிவதில்லை. குறிப்பாக விவேகானந்தர் இல்லம் எதிரிலிருந்து காந்தி சிலை வரை ஒரே கும்மிருட்டு. இது பல காதலர்களுக்கு வசதியாக இருந்தாலும் சமயத்தில், சோதனையாகவும் இருந்து வருகிறது. மிரட்டலுக்குப் பயந்து கடிகாரத்தையும், மோதிரத்தையும், பணத்தையும் பறிகொடுப்பவர்கள் நிறைய. ஆனால் பறிகொடுப்பவர்கள் காதலர்கள் ஆகையால் புகார்கள் வெளிச்சத்திற்கு வராது. அண்ணா சதுக்கம் அருகில் உள்ள காவல் நிலையத்தில் போலீஸ் காரர்களின் எண்ணிக்கையைப் பலப்படுத்திக் கண்காணிப்பைத் தீவிரப்படுத்தலாமே! மேலும் மெரினா கடற்கரை ஓரமாகப் படகுகளோ அல்லது வலைகளை வைக்கும் குடிசைகளோ இருக்கக் கூடாது என்று உத்தரவு போட வேண்டும். அப்போது தான் கடற்கரை சுத்தமாக இருக்கும்.

இரவு ஒன்பது மணிக்கு மேலும் கடற்கரைக்கு காற்று வாங்க வருபவர்கள் இருக்கிறார்கள். காரின் நான்கு கண்ணாடிகளையும் மூடிவிட்டு காற்று வாங்கும் இவர்களைக் கண்டால் (இருட்டில் காண முடியாது.) நமக்கு ஆச்சரியம் தான்!

—ப்ரியன்

மேலட்டை: மெரினா கடற்கரையில் உள்ள குறைகளையெல்லாம் மறந்து, புதிய லைட் ஹவுஸ் பக்கமாகக் கடற்கரையையும் அலைகடலின் அழகையும் அனுபவித்து ஆனந்திப்பவர்களை வண்ணப்படம் பிடித்துத் தருகிறார்:

ஏ. வி. பாஸ்கர்

## ஆக்கபூர்வமான யோசனைகள்

# மெரீனாவை மேம்படுத்துவது எப்படி?

சென்னை நகரையும், அதன் சூழலையும் நச்சுத் தன்மையினின்று காத்துத் தூய்மையாய்வைத்துக் கொள்ளப் பாடுபடவென்றே ஒரு சங்கம் திருமதி ராதா பெர்னியர் தலைமையில் உருவாகியுள்ளது.

The Enviionmental society என்ற இந்தச் சங்கத்தைச் சேர்ந்த திருமதி பிரேமா சீனிவாசன், திருமதி. கமலா கஸ்தூரி, திருமதி சுதா ரவி ஆகியோரைச் சந்தித்தேன். மூன்று பேரும் 'சென்னை மெரினா' என்று நான் ஆரம்பித்த துமே படபடவென்று பொரிந்து தள்ளி விட்டனர். குறைகளை மட்டும் அடுக்கிக்கொண்டிருக்காமல், ஆக்க பூர்வமான ஐடியாக்களையும் கொடுத்தனர்:

பீச்சிலிருந்து முதலில் பிச்சைக்காரர்களை அப்புறப்படுத்த வேண்டும். அடுத்து, பேல்பூரி, கரும்புச்சாறு, சுண்டல், முறுக்கு வியாபாரிகளுக்குக் கடற்கரையில் இரண்டு அல்லது மூன்று பகுதிகளில் தனி இடத்தை ஒதுக்கி, அங்கு மட்டுமே வியாபாரம் நடத்த அனுமதிக்க வேண்டும். தேவையானவர்கள் அங்கே போய் வேண்டியதை வாங்கிச் சாப்பிடலாம். குடிநீருக்கும் இங்கே வசதி தேவை.

நிறைய இடங்களில் குப்பைத்தொட்டிகள் வைக்கப்பட வேண்டும். வைத்தால் மட்டும் போதாது. வருபவர்களைக் காகிதங்கள் இத்யாதிகளை அவற்றில் மட்டுமே போடும்படி செய்ய வேண்டும்.

தினமும் மெரீனா பகுதியில் டன் கணக்கில் குப்பை சேருகிறது. ஆனால் அதையெல்லாம் ஒழுங்காக அப்புறப்படுத்தத்தான் சரியான நடவடிக்கை எடுக்கப்படுவதில்லை. டாய்லெட் வசதிகளை – அதிகப்படுத்துவதோடு மட்டும் இல்லாமல், அதைச் சுத்தமாக வைத்திருக்கத் தண்ணீருக்கும் வசதி செய்ய வேண்டும். பிச்சையே டாய்லெட்டாய்ப் பயன்படுத்துவதற்கு முதலில் முற்றுப்புள்ளி வைக்க வேண்டும்.

கொஞ்சம் இருட்டி விட்டால் பீச் பகுதியில் நடமாட முடியவில்லை. விளக்கு வசதிகள் அதிகரிக்க வேண்டும்.



பம்பாய் பீச் முன்பு படுமோசமாய் இருந்தது. ஆனால் இன்றைக்கு எவ்வளவு முன்னேறிவிட்டது தெரியுமா?

இங்கே கூட எலியட்ஸ் பீச்சை அழகுபடுத்த ஒரு கமிட்டி போடப்பட்டு, ஆலோசனைக் கூட்டம் நடந்தது. அதிலே கால் பந்து மைதானம் அமைக்கலாம், பார்க் அமைக்கலாம், என்றெல்லாம் யோசனை சொன்னார்கள். கேட்கச் சிரிப்புத்தான் வந்தது. 'பீச்' என்பது பரந்த மணற்பரப்பாய்த்தான் இருக்க வேண்டும் என்ற அடிப்படை விஷயம் கூடத் தெரியாதா? விளையாட்டு மைதானம், பார்க்கெல்லாம் அமைக்க வேறு இடமா இல்லை? கடற்கரை இயற்கையாய்விடப்படவேண்டும். அதிலே செயற்கைத் தனமான அலங்காரங்களைச் செய்யக் கூடாது. 'பீச்' என்பது ஏதோ வெட்டியாய்க் கிடக்கிற நிலம் என்று நினைத்து, அதைப் பயன்படுத்த ஐடியா தருகிறார்கள்!

கடற்கரை, எல்லாவிதமான செடிகள், மரங்களுக்கும் ஏற்றதில்லை. கல்யாண முருங்கை போன்ற சில மரங்களே அங்கே வளரும். அவற்றை நிறைய அளவில் வளர்க்கலாம்.

இப்போது பீச் ரோடுக்குப் பக்கத்தில், புல்வெளி இருக்கிறது. அது பரவாயில்லை. ஆனால் அது நன்றாகப் பராமரிக்கப்பட வேண்டும்.

பல மாடிக் கட்டிடங்கள் கடற்கரைக்குப் பக்கத்தில் கட்டவே கூடாது. கடற்கரையை ஒட்டி இப்படி நெடுகக் கட்டியிருப்பது காரணமாய் கடற்காற்று, உட்பகுதிகளில் போகாமல் தடுக்கப்படுகிறது. இயற்கைக் காற்றைத் தடுக்காமல் விட்டாலே போதும், நம் ஜனங்களுக்குப் பாதி நோய்களிலிருந்து விடுதலை கிடைத்து விடும்.

வடசென்னையில் ஆரம்பித்து, நெடுக மகாபலிபுரம் வரை — அழகான — இயற்கைக்கடற்கரை அமைந்துள்ளது. இதுபோல நேரான பீச் வேறு எங்கேயும் கிடையாது. ஆனால் இதில் வருத்தப்பட வேண்டிய விஷயம் என்னவெனில் பீச்சுக்குப் பக்கத்திலேயே, சின்னச் சின்னதாய் — வத்திப் பெட்டிகள் போல — வரிசையாய் வீடுகள். அரசு இதை அனுமதிப்பதுடன் பலவற்றை அரசாங்கமே கட்டியுள்ளது. இவை, இயற்கை அழகைப் பாழாக்குவது ஏன் தெரியவில்லை?

கடலிலிருந்து ஒரு கி. மீ. தூரம் வரை எந்தக் கட்டிடமும் கூடாது என்று தடை செய்ய வேண்டும். இதுபற்றி ஏற்கெனவே உள்ள சட்டம், கடுமையாய் அமல் செய்யப்பட வேண்டும்.

அமெரிக்காவிலும், மற்ற நாடுகளிலும் அரை கிலோ மீட்டர் பீச் இருந்தால் கூட மிகவும் கவனமாய்ப் பராமரிக்கிறார்கள். பல்கலைக் கழகங்களில் இதுபற்றி ஆராய்ச்சிகள் செய்கிறார்கள். இந்த ஆராய்ச்சிக்கு பீச்சாலஜி என்று பெயர்! இதுபற்றி அவர்கள் படுகவனமாய் இருக்கிறார்கள்.

ஆனால் நாம் உலகமே கண்டு பொறாமைப்பட்ட ஒரு எழிலார்ந்த கடற்கரையை நாறடித்துக் கொண்டிருக்கிறோம்!

—எஸ். சந்திரமௌலி


ஈழத் தமிழர்
சிங்கள ராணுவம்


காஷ்மீரைத் தொடர்ந்து ஆந்திராவிலும் ஜனநாயகப் படுகொலை!
மத்திய அரசு
ஆந்திர ஆளுநர்
ஆட்சி


வேலை வேலைன்னு ஏன் புலம்பறீங்?.. இந்தக் கப்பரையை வெச்சுக்கோ!
வேலையில்லா பட்டதாரிகள்
உதவிப் பணம்

கல்கி



1984 ஆகஸ்டு 26
மலர் : 43 இதழ் : 4
ரக்தாக்ஷி ஆவணி 10



# அமைதிப் படையை அனுப்புங்கள் !

''பொறுத்தது போதும் பொங்கி எழுங்கள்!'' என்று எழுத மனம் துடிக்கிறது: அறிவு அதனை இழுத்துப் பிடித்து நிறுத்துகிறது!

ஈழத்திலிருந்து வரும் செய்திகள் பயங்கரமாக உள்ளன. பயங்கரவாதிகளைச் சமாளிப்பதற்காகத் தமிழர் வாழ் பகுதிகளுக்கு அனுப்பப்பட்ட சிங்கள ராணுவம் கண்மண் தெரியாமல் அட்டூழியத்தில் இறங்குகிறது. வீடுகளை கடைகளைக் குண்டுபோட்டு நாசமாக்குகிறது. ஒரு பாவமும் அறியாத தமிழ் மக்களைக் குடும்பம் குடும்பமாக அழித்து ஒழிக்கிறது. சகோதர ராணுவத்தினரின் சடலங்களைப் பார்க்க இவர்களுக்குக் கொலை வெறி உண்டாகி விட்டதாகக் கூறப்படுகிறது. ராணுவம் சுயக்கட்டுப்பாடு இழந்து விட்டதென்றும் ஆணைகளுக்குக் கீழ்ப்படிவதில்லை என்றும் ஈழத்தின் அமைச்சர்களே ஒப்புக் கொள்கின்றனர். ராணுவத்தைக் கட்டுப்படுத்த முடியாத ஜெயவர்த்தனே ஆட்சியில் நீடிக்கவே தகுதியற்றவராகிறார். இன்னொரு பக்கம் புலிப்படையினரும் தமிழர் விடுதலைப் படையினரும் சிங்கள ராணுவத்தை மட்டுமின்றிப் பல அப்பாவி மக்களையும் தங்கள் கண்ணிகளுக்கும், குண்டுகளுக்கும் இலக்காக்குகின்றனர். இந்தச் சூழ்நிலையில் பேச்சு வார்த்தைகள் நடக்குமா? நடந்தாலும் பலன் விளையுமா?

இந்திய ராணுவத்தை அனுப்புவதா வேண்டாமா என்று நமது பிரதமர் யோசித்துத்தான் இருப்பார். அனுப்ப வேண்டிய வேளை வந்து விட்டதோ என்று கூடக் கருதியிருப்பார். பஞ்சாபுக்கும், பங்களாதேஷுக்கும் ராணுவத்தை அனுப்பியதற்கும் ஈழத்துக்கு அனுப்புவதற்கும் நிறைய வித்தியாசம் உண்டு. சர்வதேச நோக்கில் சாதக, பாதகங்களை எடை போட்டிருப்பார் இந்திராகாந்தி. அனுப்புவது நல்லதல்ல என்ற முடிவுக்கு வருவாராயின் வேறு இரு மார்க்கங்கள் இருக்கின்றன.

தமிழ்த் தீவிரவாதிகளான விடுதலைப் படையினரையும் புலிப்படையினரையும் சந்திக்க அனுப்பப்பட்ட சிங்கள ராணுவத்தினரைத் திரும்பப் பெற்று அதற்குப் பதில் தமிழ் ராணுவத்தினரை அனுப்புதல். ஜெயவர்த்தனே, தமது நாட்டின் ராணுவத்தில் உள்ள தமிழர்களை அனுப்பினால் அவர்கள் தீவிரவாதிகளுடன் சேர்ந்து கொண்டு விடுவார்கள் என அஞ்சலாம். அவ்வாறாயின் இவ்விஷயத்தில் பாரதப் பிரதமரின் உதவியை அவர் கோரலாம். இஸ்ரேல், பிரிட்டன் போன்ற நாடுகளிலிருந்து கொரில்லா பயிற்சி தர நிபுணர்களை வரவழைத்து உதவி பெறும் ஜெயவர்த்தனே அதைவிட பாரத நாட்டின் உதவியைத் தக்க முறையில் கேட்டுப் பெறுவதே மேலானது. இதன் மூலம் ஈழத்தில் அப்பாவித் தமிழர்களைச் சிங்கள ராணுவத்தினர் கொன்று குவிப்பதற்கு முடிவு கட்டலாம். இந்த யோசனையைப் பாரதப் பிரதமரே வெளியிட்டு ஜெயவர்த்தனேயின் ஒப்புதலைப் பெற வேண்டும்.

கூடவே இன்னொரு காரியத்தையும் அவசரமாகச் செய்ய வேண்டும் நம் பிரதமர். ஒரு சர்வதேச அமைதிப்படை திரட்ட வேண்டும். காமன்வெல்த் நாடுகளையும் கூட்டுச்சேரா நாடுகளையும், அமைதிப் பணியில் சர்வதேசப் புகழ்பெற்ற பெருந்தகையாளர் ஒவ்வொருவரை இந்தியாவுக்கு அனுப்பச் சொல்லிக் கேட்க வேண்டும். ஐ. நா. சபையையும் இதில் பங்கேற்க ஒருவரைத் தேர்ந்தெடுத்து அனுப்பச் செய்யலாம். சுமார் 50 அல்லது 100 பேர் அடங்கிய இத்தகைய அணிக்கு இந்திராகாந்தியே தலைமைதாங்கி இலங்கைக்குப் போக வேண்டும். பல்வேறு நாட்டவரும் மொழியினரும், நிறத்தவரும், மதத்தவருமான ஞானிகள் அடங்கிய இத்தகைய ஓர் அமைதிப் படையை 'வரக் கூடாது' என்று தடுக்க ஜெயவர்த்தனேயால் முடியாமல் போகும். உலகின் பெருமதிப்பிற்குரிய இவர்கள் நிராயுதபாணிகளாகச் சென்று ரணங்கள் ஆறவும், சினங்கள் தணியவும் அன்பு தழைக்கவும் பாடுபட வேண்டும். ஒரு வாரம் அல்லது பத்து நாட்களில் நிச்சயமாக ஒரு மகத்தான மாறுதல் ஏற்படும்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# மனம் நிறைந்தது

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி**

**ரூ. 250 3ம் பரிசுக்கதை**

**ஊ**ருக்குச் சற்றுத் தள்ளிக் கொள்ளிடக் கரையை ஒட்டிய மாதிரி இருக்கிறது அந்தப் பெருமாள் கோயில். எந்த நூற்றாண்டைச் சேர்ந்ததோ, இப்போது மிகவும் சிதிலமாகிச் சுற்றுச் சுவர்கள் காரை பெயர்ந்து காணப்படுகின்றன. கோயிலை ஒட்டிய அந்த நந்தவனம் மட்டும் பசுமையாய்த் தெரிகிறது. ஊருக்குள்ளேயே பெரிய கோயில் இருப்பதால் ஒதுக்குப்புறத்தில் இருக்கும் இந்தப் பெருமாள் கோயிலுக்கு அதிகமாய் யாரும் வருவதில்லை. கொள்ளிடத்தில் குளிக்க வரும் சில வெளியூர் ஜனங்கள் அபூர்வமாக வருவதுண்டு. அப்போது தான் நரசிம்ம பட்டருக்கு நாலு காசு என்று ஏதாவது சேரும்.

மணி சரியாய் காலை ஐந்து.

பல சமயங்களில் முழங்கால் வரைதான் தண்ணீர் என்றாலும் கொள்ளிடம் கொள்ளிடம்தான். வெள்ளை வெளேரென்று ஸ்படிகம் போலத் தண்ணீர்...

இத்தனை பேர் அழுக்கை வாங்கிக் கொண்டு, தான் மட்டும் தூய்மையாகவே ஓடும் நதியே நீ உயர்ந்தவள்தான்!

நரசிம்ம பட்டர் மூழ்கிக் குளித்தார். வாய் மட்டும், 'ரங்கப்ரபோ' என்று ஜபித்துக் கொண்டே இருந்தது. தூரத்தே கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்து கொண்டிருந்தான்.

'டிடிங், டிடிங்' என்று கழுத்துமணி சப்திக்க, பெரிய கோவில் பெருமாளின் திருமஞ்சனக் குடத்தை சுமந்தபடி யானை வந்து கொண்டிருந்தது. வருஷா வருஷம் சித்ரா பௌர்ணமி தினத்தில் இதே யானை காவிரிக் கரையில் 'ரங்கா' என்று பிளிறி, ஸ்ரீரங்கநாதரிடம் கஜேந்திர மோக்ஷம் பெறும் காட்சி சட்டென நரசிம்மபட்டர் நினைவிற்கு வருகிறது. பாகன் சொல்லிக் கொடுத்தபடி சொல்லும் இந்த யானைக்கு உள்ள அறிவும், பக்தியும் கூட தேசிகனுக்கு இல்லையே...

தேசிகன், நரசிம்மபட்டரின் ஒரே பிள்ளை. தனக்குத் திருமணமாகி ரொம்ப காலம் கழித்துப் பிறந்த பிள்ளைக்கு நல்ல பெயராய்ச் சூட்ட நினைத்தார் நரசிம்மபட்டர். தென்மொழியிலும், வடமொழியிலும் தேர்ந்தவருமான, ஸ்ரீரங்கநாயகி தாயாராலேயே 'ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர' என்று அழைக்கப்பட்டவருமாகிய ஸ்ரீ தேசிகரின் பெயரைத் தேர்ந்தெடுத்தார். வாய்நிறைய 'தேசிகா!'. என்று அழைத்து மகிழ்ந்தார்.

இரண்டு வயதிலிருந்தே அவனைக் கூடவே கோயிலுக்கு அழைத்துப் போவார். கோயிலை ஒட்டிய அந்தச் சிறு நந்தவனத்தில் பூக்கும் குண்டு மல்லிகை, இருவாட்சி, மரு, திருத்துழாய் — எல்லாவற்றையும்பறித்து



மாலை கட்டுவார். தினசரி கொள்ளிட ஜலத்தில் பெருமாளுக்கும், தாயாருக்கும் திருமஞ்சனம் செய்து, வஸ்திரம் மாற்றி, நாமக் கட்டியைக் குழைத்து அந்தக் கார்வண்ணன் நெற்றியில் 'பளி'ரென நாமம் இடுவார். திருசூர்ணத்தை நடுவில் தீட்டி விடுவார். 'பளிச்' என்ற இந்தத் திருமண்தான் அந்த ஏழைப்பெருமாளின் பெருநகை – அடுத்து எப்போதும் எம்பெருமாளின் இதழ்க்கடையில் சதா தெரியும் புன்னகை. வெண்கலப் பானையில் வெண்பொங்கல் படைத்து அம்சை (நைவேத்தியம்) பண்ணும் போது, 'பெருமாளே! இந்தக் காரியத்தை உமக்குச் செய்ய எனக்குக் கடைசி வரை உடம்பில் பலத்தைக் கொடுங்கோ...' என்று நரசிம்ம பட்டர் இப்போதெல்லாம் அழுதுவிடுகிறார். வாஸ்தவம்... வர, வர அவருக்கு உடம்பில் பலமே இல்லைதான்... வயது என்ன கொஞ்ச நஞ்சமா, எழுபதாகப்போகிறது. இல்லையா... இந்த எழுபது வயதிலும் அவர் தொண்ணூறு வயதானவர் போல மெலிந்து; கண் இடுங்கிப் போய், கை, கால் துவளக் காரணம், அவருக்குப் பல வருஷங்கள் முன்பு மனத்தில் பட்ட அடிதான். ஐந்து வயது சிறுவனை அவரிடம் விட்டுவிட்டு மனைவி ஆண்டாள் மறைந்த போது கூட அத்தனை அரண்டு போகாதவர், பள்ளிக்கூடம் போகிறேன் என்று திருமஞ்சன வாய்க்கால் பாலத்தடியில் சீட்டு விளையாடிய பதினைந்து வயது தேசிகனை ஒருநாள் விறகுக் கட்டையாலேயே விளாசி விட்டார். ஆனால் அடி, உதையெல்லாம் தேசிகனுக்கு அலட்சியமான ஒன்றாய் இருந்தது. பின்னே, தோளுக்கு மேல் வளர்ந்தால் தோழனும், தேசிகன் எமனும் இருந்தான். தானாகவே எட்டாவதுடன் படிப்பை நிறுத்திக் கொண்டான். ஊரில் இருக்கும் தத்தாரிகளுடன் சேர்ந்து வேண்டாத கெட்ட பழக்கங்களைக் கற்றுக் கொண்டான்.

ஒருநாள் நரசிம்மபட்டர் வாய் விட்டுக் கத்தி விட்டார்.

''டேய், தேசிகா... நீ படிச்சு, உசந்து, பேரும் புகழுமாய் இருப்பாய்னு நினைச்சேன்... அதுதான் இல்லைன்னாலும் நம்ம குடும்பத்தில் பரம்பரைப் பரம்பரையாய் நாம செய்து வருகிற இந்தப் பெருமாள் கைங்கர்யத்தையாவது எனக்கப்புறம் நீ செய்யணும். இப்பவும் ஒண்ணும் தாமசமில்லே. என்கிட்ட வேதாப்பியாசம் கத்துக்க யாரார்ரோ வந்துட்டுப் போறா... நீயும் வந்து சேர்ந்துக்கோப்பா... வேதம் படி தேசிகா...''

''வேதம்?'' 'ஹாக்' என்று சிரித்தான் தேசிகன். அருகில் வந்து அப்படி அவன் சிரிக்கும் போது வீசிய சிகரெட் நாற்றம் நரசிம்மபட்டருக்கு வயிற்றைக் குமட்டியது.

''அப்பா! நீங்க சொல்ற இந்த வேதம் போடுமா சாதம்?'' என்றான் இண்டலாய்.

''போடறதுடா... ஒண்ணுமில்லேன்னாலும் இந்தக் கோவிலுக்குச் சொந்தமான கொஞ்ச மான்யத்திலிருந்து வர்ற வருமானம்தானடா நம்ம ரெண்டு பேரையும் காப்பாத்திண்டிருக்கு...''

''ஐ! நீங்களும் உங்க கோவிலும்! நாலு பக்கமும் குட்டிச் சுவர்... நடுவில ஒரு சாமி... இதைக் கட்டிண்டு நான் அழமாட்டேன்... பணம் சம்பாதிக்க நெறைய குறுக்கு வழி யோசனை பண்ணி வச்சிருக்கேன்...''





## அருள் வாக்கு

மேல் நாடுகளில் Orphan Home (அநாதை இல்லம்) என்று தனியாக வைக்கிறார்களென்றால் நம் சாஸ்திரப்படி ஒவ்வொரு இல்லத்திலும் அநாதைக்கும் அதிதிக்கும் இடமுண்டு. மேல்நாட்டுக் காரர்களின் வீட்டுக்குள் அநாதைகளோ அதிதிகளோ நுழையக் கூட முடியாமல் நாய் கட்டியிருக்கும். அவன் வாழ்க்கையோடு, ரத்தத்தோடு அதிதி ஸத்காரமும் அநாதைப் பராமரிப்பும் ஒட்டாமல் அவைபாட்டுக்கு மெகானிகலாக ஸ்தாபன ரீதியில் நடக்கும். (எல்லோரும் இப்படி என்று நான் சொல்லவில்லை. எந்த தேசத்திலும் உத்தமர்கள், பரோபகாரிகள், இபாகிகள் உண்டு. அப்படியே ஸ்வயநலக்காரர்களும் உண்டு. பொதுவாகச் சொன்னேன்.) அவனைப் பார்த்துச் சொண்டு, "அதிதி தேவோபவ" என்ற கொள்கையைக் கொண்ட நம் தேசத்திலும் வீட்டு வாசல்களில் "நாய் ஜாக்கிரதை" போர்டுதொங்குவதைப் பார்த்தால் வேதனையாயிருக்கிறது. "வா வா" என்று வழிப்போக்கர்களைக் கூப்பிட்டுப் படுக்க வைத்துக் கொள்ளவே 'திண்ணை' என்பது நம்முடைய வைதிகமான க்ருஹ சில்பத்தில் இருந்தது. இப்போது அதெல்லாம் போச்சு.

மேல்நாட்டு மோஸ்தரில் இங்கேயும் தனி மனுஷ்யனின் குடும்பம் தனக்கே என்று ஆன பிறகு, இங்கேயும் அங்கே மாதிரி ஸமூகப்பணிகளை 'இன்ஸ்டிட்யூஷனலைஸ்' செய்வதாகவும் Welfare state என்பதாக ராஜாங்கமே அநாதையில்லம், வயதானவர் பென்ஷன் என்றெல்லாம் நடத்துவதுமாக ஆகிவிட்டது. இன்றைய ஸெட் அப்பில் இதுவுமில்லா விட்டால் நிராதரவானவர்களின் பாடு ரொம்பவும் கஷ்டமாகத்தான் ஆகிவிடும். ஆனாலும் பூர்வத்தில் ஒவ்வொருவரும் 'வஸுதைவ குடும்பகம்' (லோகம் முழுக்க ஒரு குடும்பம்) என்ற அன்பான எண்ணத்தோடு தாங்களே ஆதரவற்றவர்களைத் தாங்கித் தரித்த முறையோடு ஒப்பிட்டால் இப்போது ராஜாங்க ரீதியில் ஆபீஸாக ஸமூகக் காரியங்களை நடத்துவது இரண்டாம் பக்ஷம்தான்!

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய ஸ்வாமிகள்

'நறுக்'கென்று சொல்லிவிட்டு லுங்கியைத் தூக்கிக் கட்டியபடி தேசிகன் வெளியேறுகிறான்.

'பெருமாளே!' என கோயில் வாசற்படியிலேயே இடிந்து போய் உட்காருகிறார், நரசிம்மபட்டர்.

எத்தனை நேரம் அப்படியே உட்கார்ந்திருந்தாரோ எழுந்து போக எத்தனித்தவர் முன் சாஷ்டாங்கமாய் அப்படியே விழுந்து தெண்டன் சமர்ப்பித்தான் ஒரு இளைஞன். அவனை இதற்கு முன் பட்டர் பார்த்ததில்லை. நல்ல சிவப்பாய் இருந்தான். வாரி பின்பக்கம் பந்தாய் முடியப்பட்ட தலை. நிமிர்ந்த போது திருமண் ஸ்ரீசூர்ணம் பளீரென்றது.

'தீர்காயுஷ்மான்பவ!' என்று ஆசீர்வதித்தார்.

இளைஞன் அவர் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

''என்ன சர்மன் சொன்னே?'' என்று கேட்டார்.

''கோபாலன்.''

''உன்னைப் பார்த்த மாதிரியே இல்லையே! நீ இந்த ஊர்ப் பையனா?''

''தேவரீர் கேட்டா ஆச்சரியப்படுவீங்கோ. பல வருஷம் மின்னாடி இந்த ஊரை விட்டு 'வேலைநிமித்தம்' டில்லிக்குப் போன 'சர்க்கரைப் பொங்கல்' சக்ரபாணியை ஞாபகமிருக்கா உங்களுக்கு?''

புருவத்தைக் கூட்டி யோசித்தார் நரசிம்ம பட்டர்.

''அடேயப்பா... முப்பது வருஷத்துக்கு முந்தைய கதையில்லையா அது!''

சக்ரபாணியை மறந்தாலும் அவர்கள் வீட்டுச் சர்க்கரைப் பொங்கலை மறக்க முடியுமோ? வருஷாவருஷம் மார்கழி மாதம் வந்து விட்டால் சக்ரபாணி வீடு இரண்டுபடும். பெரிய கோயிலுக்கு அடுத்த படியாக அவர் வீட்டு வாசலில் தான் கூட்டம் நெரித்துத் தள்ளும். உத்தரவீதியையே அடைத்துப் பந்தலிட்டு, மாதம் முழுவதும் பகவத் உபந்நியாசம் செய்ய வைத்து, தினசரி நெய் வழிய, ஜாதிக்காய் மணக்க, முந்திரி ததும்ப அந்தச் சர்க்கரைப் பொங்கல் பிரசாதமல்லவோ மிகப் பிரசித்தமானது?

''ஞாபகமிருக்குப்பா... செவிக்கும், வயத்துக்கும் இனிமை தந்த மகானுபாவர்... மகா பெரிய மனக்காரர்... அவருக்கு நீ உறவா?''

''ஆமாம்... நான் அவரோட கடைசிப் பிள்ளை... பேர் கோபாலன்!'' அடியேனை உங்கள் மாணவனா ஏத்துண்டு வேதோபதேசங்களைக் கத்துத்தரணும்... கிருபை புரியணும்...''

நரசிம்மபட்டர் தம் முன் சிரம் தாழ்த்தி பக்தியும், பணிவும், ஆவலுமாய் நிற்கும் கோபாலனைப் பார்க்கிறார். பிறகு திரும்பி அவர் பெருமாளைப் பார்க்கும் போது எம்பெருமானின் புன்னகை ஏதோ கேட்பது போல உணர்ந்தார். 'உனக்கென்ன இனி கவலை? இளைஞனை ஏற்றுக் கொள்' என்ற பதிலாய்ப் பெருமாளின் உச்சியிலிருந்து

புஷ்பம் ஒன்று உதிர்ந்தது. பட்டருக்கு உடம்பே சிலிர்த்தது.

நாட்கள், மாதங்களாகி, வருஷங்களாய்ப் பறக்கின்றன.

ஐந்து வருஷம்! இந்தக் காலத்திற்குள் தேசிகன் ஒரு திருட்டுக் குற்றத்தில் மாட்டி ஜெயிலுக்குப் போனதும், கோபாலன் வேதமும், உபநிஷத்தும் படித்துத் தேர்ந்ததும் தான் முக்கிய நிகழ்ச்சிகள்.

அன்று எழுந்திருக்கும் போதே நரசிம்ம பட்டருக்குக் கையையும், காலையும் யாரோ பிழிந்து போட்ட மாதிரி துவண்டு போகிறது. தலையைத் தூக்க முடியவே இல்லை. எழுந்து, கொள்ளிடம் போய்க் குளித்து வந்து பெருமாளுக்குத் திருமஞ்சனம் செய்ய முடியும் என்ற நம்பிக்கையைய இழந்தவராய்த் தளர்ந்து போனார்.

பெருமாளின் நித்ய கைங்கர்யமெல்லாம் கோபாலனுக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறது. ஆனாலும் ஒருநாளும் அவன் பொறுப்பில் பட்டர் பெருமாளை விட்டதில்லை. கோவில் வாசல் அலம்பி, கோலமிட்டு, பூ கொய்து தொடுத்து — என்று கோபாலனுக்கு இவைகள்தாம் தினசரி வேலைகள்.

கண்ணை இடுக்கிச் சிரமப்பட்டு நரசிம்ம பட்டர் பார்த்தார். சற்றுத் தள்ளி வாசல் திண்ணையில் உட்கார்ந்திருந்த கோபாலன் மாலை கட்டி முடித்து உட்கார்ந்த இடத்தில் உரத்த குரலில் பாட ஆரம்பிக்கிறான்.

'சிற்றஞ்சிறுகாலே வந்துன்னை சேவித்து..'

சட்டென உடம்பு குலுங்குகிறது பட்டருக்கு.

''கோ...கோபாலா...''

பிராணவஸ்தையின் கடைசிக் கட்டத்திற்குத் தான் வந்து விட்டதைப் புரிந்து கொண்ட பட்டர் அலறி விட்டார்.

பதறியபடி கோபாலன் அருகில் வந்தான்.

''ஸ்வாமின்! என்ன ஆச்சு? என்ன ஆச்சு?''

''இப்படி வந்து பக்கத்துல உட்காருப்பா...''

''ஸ்வாமின்... டாக்டரை அழைச்சிண்டு வரட்டுமா?''

'பெரியவர் சாகும் தருவாயில் இருக்கிறார்... இப்பவாவது உண்மையைச் சொல்லிவிடு...' மனசு அவனை எச்சரித்து வாய் வரை வந்து அதட்டி வார்த்தைகளை உந்தித் தள்ள ஆரம்பிக்கிறது.

''ஸ்வாமின்!'' என்று கண்ணில் நீர் பெருக்கிப் புலம்பினான், கோபாலன். ''நான் பாபி! மகா பாபி!''

''நீயா?'' வேதனையிலும் சிரித்தார் பட்டர். ''ஒரு பிள்ளை செய்ய வேண்டிய கடமையைக் கடந்த அஞ்சு வருஷமாய் செய்து வரும் நீயா பாபி? கோபாலா, நீ உத்தமன்!''

''ஸ்வாமின்... உங்களை அஞ்சு வருஷம் முன்னாடியே ஏமாத்திட்டேன். ஆனா இந்தக் கட்டத்துலே உங்ககிட்ட உண்மையை மறைக்க விரும்பலை ஸ்வாமின்... நான் நிஜமாய் சக்ரபாணி பிள்ளை கோபாலன் இல்லை... நான் பிராமணனே இல்லை...''

''கோபாலா!''

# சினிமா விமர்சனம்

## பட்டுப் புடவைப் பரிசுத் திட்டம்

போட்டி 17:



சென்ற வாரம் நீங்கள் பார்த்த ஒரு திரைப்படம் பற்றிச் சில வரிகளில் விமர்சனம் கீழே வெற்றிடத்தில் எழுதவும். எந்த மொழிப் படமானாலும் சரி. மீண்டும் திரையிடப்பட்ட பழைய படமானாலும் பாதகமில்லை. இந்த அரைப் பக்கத்தைக் கத்தரித்து உறை மீது, ''சினிமா விமர்சனம்'' என்று குறிப்பிட்டு அனுப்பவும். ரசமான விமர்சனங்கள் பிரசுரமாகிப் பரிசு பெறும். தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டுப் புடவை பரிசு.

முடிவு தேதி: 10.9.84.

36 பட்டுப் புடவைகளுள் ஒன்றைப் பெறும் வாய்ப்பை நழுவ விடாதீர்கள். வாரந்தோறும் போட்டிகளில் கலந்து கொள்ளுங்கள்.

என் பெயர்: ..........................

விலாசம் : ..........................

..........................

''க்ஷமிக்கணும், ஸ்வாமின்... அந்த வருஷம் முன்னாடி நான் இருந்ததெல்லாம் விழுப்புரம் பக்கத்துல ஒரு கிராமத்தில். அனாதையான என்னை வேண்டா வெறுப் பாய்ப் படிக்க வைச்ச உறவுக்காரர்கள் வேலை ஏதும் கிடைக்கலைன்னு அடிச்சி விரட்டினார்கள். ஊருக்குள் இது மாதிரி ஒரு பெருமாள் கோயில் வாசலிலேயே பசியும் பட்டினியுமாய்க் கிடந்தேன். அங்க என்னை மாதிரி ஒரு அனாதை பிராமண சிநேகிதன் கிடைச்சான். அவன்கிட்ட நானும் விரும்பி பூணூல் போட்டுக் கொண்டு பிராமணப் பழக்க வழக்கம், ஆசார அனுஷ்டானங்களை ஓரளவு கத்துண்டேன். திடீர்னு அந்த சிநேகிதன் மார்வலியால் இறந்துபோனான். அந்த அதிர்ச்சியின் முடிவில் நானும் தற் கொலை பண்ணிக்க ஒரு ராத்திரி கிராமத்து பாதையில் நடந்து வந்தப்ப கவிழ்ந்து கிடந்த பஸ்ஸைப் பார்த்தேன். தாறு மாறாய் மனிதர்கள். சாலை ஓரமாய் ஒரு இளைஞன் கோரமாய் செத்துக் கிடந்தான். அவன் சட்டைப் பையிலிருந்து நீட்டிக் கொண்டிருந்த கடிதத்தை ஓர் ஏதோ ஆவ லில் பிரித்துப் படித்தேன்.

'தேவரீர் நரசிம்ம பட்டர் அவர்கட்கு.

அடியேன் 'சர்க்கரைப்பொங்கல்' சக்ர பாணி தாஸஸ்ய விக்ஞாபனம். ஊரைவிட்டு நான் டில்லி வந்து முப்பது வருஷமாகி விட்டது. இன்னமும் என்னால் நம் ஊரையும் பெரிய கோவிலையும், உற்சவத்தையும் மறக்க முடியவில்லை. பிள்ளைகள் ஒவ்வொரு வரும் அமெரிக்கா, ஜெர்மனி எனப்போய் விட்டனர். கோபாலன் கடைசிப்பிள்ளை. அவன் ஒருத்தனாவது வேதம், உபநிஷதம் படிக்கட்டுமே என்று தோன்றியது. தேவரீர் தேர்ந்த வேத விற்பன்னர். கோபாலனைத் தங்கள் வசம் ஒப்படைக்கிறேன். பிள்ளை யுடன் அங்கு வந்து ஆவலை விண்ணப்பிக்க உடம்பு இடம் கொடுக்கவில்லை. பக்கவாத நோய் வந்து பல வருஷமாகி விட்டது.

நன்றியுடன்,

சக்ரபாணி.'

கடிதத்தைப் பார்த்ததும் ஒரு நிமிஷம் யோசிச்சேன். அப்புறமும் ஒரு பத்துநாள் தீவிரமாகச் சிந்திக்க நான் எடுத்த துணிச்ச லான முடிவு தான் உங்ககிட்ட என்னை அழைச்சி வந்தது. நான் எனக்கு ஒரு வழி வகுத்துக்கணும்கிற வேகத்தில் அன்னிக்கு உங்களை ஏமாத்திட்டேன்...''

கோபாலன் கதறி முடித்ததும் நரசிம்ம பட்டர் ரெமப்பட்டுச் சிரித்தார்.

''கோபாலா நீ மட்டுமில்லை நானும் தான் உன்னை அன்னிக்கு ஏமாத்தினேன். நீ என்கிட்ட வந்த அன்னிக்குக் காத்தா லேயே ஒரு தபால் சக்ரபாணி கிட்டே யிருந்து வந்துடுத்து. 'பிராப்தம் இல்லை... பிள்ளை கோபாலன் பஸ் ஆக்ஸிடெண்டில் போயிட்டான்'னு எழுதி இருந்தார்.''

''ஸ்வாமின்?''

''கோபாலா! அன்னிக்குப் பெருமாளே தான் உன்னை எனக்குப் பின்னாடி அவருக்குக் கைங்கர்யம் பண்ண அனுப்பிச்சிருக்கார்'னு நெனைச்சித்தான் நான் உன்னை ஏத்துண் டேன். கொஞ்ச முன்னாடி நீ பாடினியே, 'பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்த நீ...'ன்னு அந்தப் பெருமானே மாடுகள் மேய்க்கிற குலத்தில் பிறந்தவன் தான்! அவனுக்குப் பணிவிடை செய்யறவன் யாரா யிருந்தாலும் ஆத்ம சுத்தியோடு இருந்தாப் போதும். பிராமணன் தான் தெய்வ கைங்கர்யம் பண்ணணும்னு அந்த பிராமண னின் லட்சணம் என்ன தெரியுமா? உபநிஷத் சொல்றது: சத்தியத்தைக் கடைப்பிடிக் கிறவன் எவனாயிருந்தாலும் அவன்தான் பிராமணன்னு. நீ என்னை ஏமாத்தணும்னு நினைச்சிருந்தா இப்ப இந்த நிஜத்தைச் சொல்லி இருக்க மாட்டாய். அன்பும், அடக்கமுமானவன் பிராமணன். மனக் கட்டுப்பாடு உள்ளவன் பிராமணன். சத்தி யத்தைத் தெய்வமாய் நினைக்கிறவன் பிராமணன். கோபாலா, நீயும் பிராமணன் தான்!''

''ஸ்வாமின்!''

''நீதாண்டா பிராமணன்... போ, எழுந்து பெருமாளுக்கு திருமஞ்சனம் பண்ணி ஆராதனையை ஆரம்பி...''

உத்தரவிடுகிற மாதிரி பட்டர் சொல்லி யதும் கோபாலன் தயங்கி எழுந்து நகர்ந் தான்.

திருப்தியும், நிம்மதியும் கலந்த நிரந்தரப் புன்னகையோடு நரசிம்மபட்டர்கண்மூடினார்.

---

**ஏமாற்றமளித்த உறவுகள்**



''நிலவுகளாகும் உறவுகள்'' என்ற தலைப்பில் திரு. த. சௌந்தர்ராஜன் (ஞானகிமகன்) எழுதிய சிறுகதை ஏற்கெனவே அவரால் வேடந்தாங்கல் ''இலக்கிய வீதி'' போட்டிக்கு அனுப்பப்பட்டு வெற்றி பெற்றிருப்பதுடன் இதே கதைத் தலைப்பில் வெளியான புத்தகத்திலும் பிரசுரமாகி யுள்ளது. எனவே ''நிலவுகளாகும் உறவுகள்'' 1984 அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியிலிருந்து நீக்கப்படுகிறது. அதற்குப்பதில் **''ஷைலஜா''** எழுதியுள்ள **''மனம் நிறைந்தது''** என்ற இந்தச் சிறுகதை **மூன்றும்** பரிசு பெறுகிறது.

முகவரி: ஸ்ரீமதி மைதிலி நாராயணன், (ஷைலஜா),
41, மைக்கோ லே அவுட்,
பார்னர் கட்டா சாலை, பெங்களூர் 560 076.

''ஷைலஜா''வுக்கு நமது வாழ்த்துக்கள். **-ஆசிரியர் கல்கி**

# பிரிவு



ஜி. பத்மாவதி

'ண்ணு' என்று மழலையாய் அழைத்த அந்தக் 'கொழு கொழு' குழந்தையை 'கமான் டார்லிங்' என்றவாறே அவன் கைநீட்டி வாங்கினான். அந்தக் கணமே அது அவனோடு வெகு அன்னியோன்யமாய்ப்பழக ஆரம்பித்து விட்டது.

எதிரேயிருக்கும் அப்பா, அம்மாவைக்கூட 'யாரோ' மாதிரி பார்த்துக்கொண்டு, அவன் கண்ணாடியைப் பிடுங்கி, பாண்ட்டை நனைத்து– என உரிமையோடு அட்டகாசம் செய்து கொண்டிருந்தது.

அவனும் அதற்கு ஸ்டேஷனுக்கு ஸ்டேஷன் ஏதாவது வாங்கிக் கொடுத்துக் கொண்டேயிருந்தான். ரயில் ஏறும் போது மனசை அழுத்திக் கொண்டிருந்த கனமகளெல்லாம் அந்தக் குழந்தையால் குறைந்து விட்டது போலிருந்தது.

அதன் பெற்றோரும் அவனுடன் சகஜமாய்ப் பழகினார்கள்.

''எது வரைக்கும் போறீங்க...?''

''மெட்ராஸ்தான். என் பிரண்ட் ஒருத்தனை வேலை விஷயமாய் பார்க்கப் போறேன்'' இப்படிப் பொய் சொல்லுகிறோமே என்ற குற்ற உணர்வுடன் கூறினான்.

''நீங்க...?''

''நாங்களும் மெட்ராஸ்தான். இங்க ஒருத்தர் கல்யாணத்துக்குப் போயிட்டு வர்றோம்...''

மதியம் ஒரு மணியளவில் விழுப்புரத்தில் சற்று இளைப்பாறிவிட்டு, அந்த 'டே எக்ஸ்பிரஸ்' வேக வேகமாய் ஸ்டேஷன்களைக் கடந்து கொண்டிருந்த போது அவனின் மனத்தில் குழந்தையைப் பிரிய வேண்டுமே என்ற புதுக்கவலையும் வேறு புகுந்து கொண்டது.

குழந்தை அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தது. அதை எழுப்ப முயன்ற அம்மாவை, ''வேண்டாங்க அவன் தூங்கட்டும்'' என மறுத்து விட்டான். அவன் விழித்து, அவனை நோக்கித் தாவினால் அவனால் தாள முடியாது போலிருந்தது.

''மிஸ்டர் ரவி, இந்தாங்க என் விசிட்டிங் கார்ட். டைம் கிடைச்ச போது கண்டிப்பாய் வாங்க. வரட்டுமா?''

அவர்கள் விடைபெற்ற போது குழந்தையின் கன்னத்தில் அழுத்தமாய் முத்தமிட்டு விட்டு, ''போய்ட்டு வாங்க, ஷ்யூரா வர்றேன்'' என்றான் – கண்ணீரைக் கட்டுப் படுத்தியவனாய்.

அவர்கள் போன பின் ஸ்டேஷனே வெறிச்சோடி விட்டது போலிருந்தது.

அந்தக் குழந்தையின் குண்டுக் கன்னங்களும், துறுதுறு கண்களும், பிஞ்சு விரல்களும், பஞ்சு ஸ்பரிசமும் திரும்பத் திரும்ப மனத்திரையில் வட்டமிட்டன. துக்கம் தொண்டையை அடைத்தது.

திடீரென அவனுள் ஏதோ ஒன்று உறைத்த மாதிரியிருந்தது.

இந்த ஆறு மணி நேரப் பழக்கமே நம்மை இத்தனை தூரம் பாதிக்கிறதென்றால், இருபத்தைந்து வருட அரவணைப்பை ஒரே நிமிட சஞ்சலத்தில் உதறிவிட்டு வந்துவிட்டேனே! அந்தப் பெற்ற மனங்கள் என்னமாய்ப் பாடுபடும்?

சே... என்ன மடத்தனம்? கோபத்தில் ஏதோ திட்டியதற்காக இப்படியா செய்யத் துணிவது?...

அப்பா அம்மாவைப் பார்க்க மறுபடியும் ஒரு ஆறு மணி நேரம் பயணிக்க வேண்டுமே என்ற பிரிவுச் சுமையுடன், எதிர் பிளாட்பாரத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்தான் அவன்.



## நீங்கள் கேட்டவை — தராசு



○ பாராட்டா? பரிதாபமா..

○ கோபுரமாய் உயர்ந்தார்!

○ எஸ். என். டி. ராஜன், திருவைநகர்.
? இலங்கைத் தமிழர் பிரச்சினைக்கு விடிவு காலமே இல்லையா?
! கத்தி—கபடா, துப்பாக்கி—குண்டு முதலிய வற்றை ஒதுக்கி விட்டு எல்லா தரப் பினரும் விவாத மேஜைக்கு வரும்போது தான் விடிவு காலம். அது வரை போதாத காலம்தான்.

○ ஆர். கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்.
? டி. ராஜேந்தரின் எதிர்காலம் அரசியலோடு ஐக்கியப்பட்டதால் பாதிக்கப்படுமா?
! நிச்சயமாக. சாதகமான முறையிலா, பாதகமான விதத்திலா என்று நீங்கள் கேட்காத வரை நானும் ஜோஸியம் கூறத் தேவையில்லை!

○ எஸ். பாரதி நாகராஜன், கவுந்தப்பாடி.
? காலையில் எழுந்ததும் யார் முகத்தில் விழிப்பீர்கள்?
! கண்ணாடியில் தன் முகத்தையே பார்ப் போரையும், மனைவி முகத்தில் விழிப் போரையும், இதற்காகவே இஷ்ட தெய்வத்தின் படத்தைத் தலையணைக்கடி யில் வைத்துக் கொண்டு தூங்குவோரை யும், குழந்தையை அழைத்துக் கட்டி அணைத்துக் கொண்டு, பிறகு இமைகளைத் திறப்போரையும் எனக்குத் தெரியும். ஆனால் நான் விழிப்பது என்னவோ தினமும் பால்காரப் பையன் முகத்தில் தான்.

! ஹே...ஹைஜாக், வெடிகுண்டுக்கெல்லாம் பயந்தவனில்லை நான்... ஆனால் அன்பர் களை சங்கடத்துக்குள்ளாக்க அஞ்சுபவன். அதனால் 'இதோ நான் ரெடி: டிக்கெட்டு களுடன் நீங்கள் தயாரா?' என்று கேட்கப் போவதில்லை!

○ க. தியாகராஜன், நெய்வேலி.
? அ. தி. மு. க. வுக்கு கோ. ப. செ. கனியா? அல்லது சுமையா?
! சரியான முகம்.

# மனைவியைக் கைக்குள் போடுவது எப்படி?

○ தே. ச. ராஜகோபாலன், சென்னை—1.
? பாலசந்தர், பாரதிராஜா, பாக்கியராஜ்— வரிசைப்படுத்தியது சரியா?
! எதில்? வசூலில் என்றால் உல்டா.

○ செ. அன்புமதியழகன், கொல்லம்பட்டி.
? வருகிறீர்களா? இருவரும் விமானத்தில் எங்காவது சென்று வருவோம்?



○ எதிர்காலம்?



○ நடிப்பில் [illegible]!

○ வைஷ்ணவி, புகலூர்.
? மன்னித்தலின் சுகத்தை அனுபவித்திருக் கிறீர்களா?
! தவறுகள் மன்னிக்கப்பட வேண்டும்; குற்றங்கள் தண்டிக்கப்பட வேண்டும் என்ற கருத்துடையவன் நான். குழந்தை கைதவறி ஒரு விலை உயர்ந்த பொருளைக் கீழே போட்டு உடைத்து விட்டால் மன்னிப்பேன். கலங்கிய கண்ணும் மலர்ந்த முகமுமாக என்னைக் குழந்தை கட்டி அணைத்துக் கொள்ளும்போது சிலிர்ப்பேன். எனக்கு நன்கு தெரிந்த ஒருவன் வேலை பார்த்த இடத்தில் பணத்தைக் கையாடிவிட்டு உதவி வேண்டினான். நிர்தாட்சண்யமாய் மறுத்து விட்டேன். ஜெயிலுக்குப் போய் விட்டுத் திரும்பிய பிறகு பண உதவி செய்தேன். சிறு தொழில் சொந்தத்தில் தொடங்கி இப்போது சென்னைச் சுற்றுப் புறத்தில் வீடு கட்ட நிலம் வாங்குமள வுக்கு முன்னேறி விட்டான்!

○ காழி. க. இளங்கோ, நந்திய நல்லூர்.
? தேவர்களைப் போல் மனிதர்களுக்கும் பசி இல்லாதிருந்தால்?

! சத்துணவு போட்டுப் பெரும்புகழ் அடைய முடியாது.

○ ரா. நாகன், சென்னை–106.

? ஒலிம்பிக் பந்தயங்களில் ஹாக்கியை மட்டுமே நம்பி ஏமாந்து போகிற அவலம் நமக்கு எத்தனை காலம் நீடிக்கும்?

! ஒலிம்பிக் ஒலிம்பிக் என்பதாக ஒன்று நாலு வருஷத்துக்கு ஒரு தடவை நடக்கிற வரை, அதில் ஹாக்கி, ஹாக்கி என்று ஒரு விளையாட்டு இடம் பெறுகிற வரை நாமும் . நம்பிக்கை நம்பிக்கை என்று விடாப்பிடியாக இருக்க வேண்டியது தான். வெற்றி வாய்ப்பு இருந்தால்தான் ஒலிம்பிக்கில் பங்கேற்க வேண்டும் என்பதல்ல. விடா முயற்சியும் தேசப்பான்மையும்தான் முக்கியம்.

○ மு. மதிவாணன், அரூர்.

? தமக்குச் சண்டைப் படங்களை இயக்கத் தெரியாது என்று இயக்குனர் பாலசந்தர் வெளிப்படையாகக் கூறியிருப்பது பற்றி...?

! உங்களுக்குத் தெரியுமா? அமரர் கல்கி நாடகம் எழுத விரும்பியதில்லை. அந்தத் துறை எனக்குச் சரிப்பட்டு வராது. அதில் கெட்டிக்காரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் ஈடுபடட்டும் என்று கூறி கௌரவமாக ஒதுங்கி விட்டார். பார்த்து ரசித்ததோடு சரி. அது போல் பால சந்தரும் நடந்து கொள்கிறார். வரவேற்க வேண்டியதே. எல்லோரும் எல்லாவற்றிலும் புகழ் பெற வேண்டும் என்ற அவசியம் என்ன வந்தது?

○ எம். எட்வர்ட் ராஜப்பா, அயன்புரம்.

? பட்டுப் புடைவைப் பரிசுத் திட்டம், வானொலியில் நேரம் நல்ல நேரம் இவையெல்லாம் சரிந்து கொண்டிருக்கும் கல்கியின் விற்பனையைச் சரிக்கட்டவா?

! இல்லை, அதிகரித்துக் கொண்டே போகும் விற்பனையை மேலும் அதிகரிக்க.

○ ஆர். சிவராஜ், லால்குடி.

? துணை ஜனாதிபதி தேர்தலில் தோல்வி கிட்டும் என்று தெரிந்திருந்தும் எதிர்க்கட்சிகள் காம்லேவை வேட்பாளராக்கியிருப்பது பாராட்டுக்குரியதா, பரிதாபத்துக்குரியதா?

! நிச்சயம் பாராட்டுக்குரியதுதான். வெற்றி தோல்வியை விடவும் ஜனநாயக உணர்வும், எதிர்ப்புத் தெரிவிக்கிற துணிவும் முக்கியமானவை.

○ எம். செல்லையா, சாத்தூர்.

? அன்னை இந்திரா, அன்னை தெரஸா—ஒப்பிடுக.

! ஒற்றுமை அன்னை என்ற அடைமொழியில் மட்டுமே.

○ நாகலட்சுமி, சென்னை–20.

? சமீபத்தில் படித்த இந்த ஜோக் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? — "மதுவிலக்கு தளர்த்தப்பட்ட போது அரசு விற்பனை செய்த சாராய அளவு மாதம் ஒன்றுக்கு 40 லட்சம் லிட்டர். இரு ஆண்டுகளில் இது 132 லட்சம் லிட்டராக உயர்ந்துள்ளது. கள்ளச் சாராயப் புழக்கம் தடுக்கப்பட்டு விட்டதே, இதற்குக் காரணம்!" — கூறியிருப்பவர் எம். ஜி. ஆர்.

! இதை விட டாப்பான ஒரு ஜோக் நான் சொல்கிறேனே! "ஹோட்டல் முதலாளிகள் ஹோட்டல் பண்டங்களின் விலைகளை ஒரு வாரத்துக்குள் குறைக்கா விட்டால் அ. தி. மு. க. (ஆளும் கட்சி!) போராட்டம் நடத்தும்!" — கூறியிருப்பவர் எம். ஜி. ஆர்.

○ மங்களா சேஷாத்ரி, சென்னை–50.

? ஸ்ரீரங்கம் ராஜகோபுரம் கட்டும் ஜீயர் சுவாமிகள் பற்றி....?

! வானளாவ உயரும் கோபுரத்துடன் போட்டி போட்டுக் கொண்டு அவர் புகழும் வளர்கிறது. லட்சிய நோக்கு, விடா முயற்சி, துணிவு, இடையூறுகள் கண்டு அஞ்சாமை, செயல் திறன் முதலியவற்றுக்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறார். தமிழர் உள்ளங்களில் அவர் மதிப்பு கோபுரமாக உயர்ந்து நிற்கும்.

○ கோ. க. சுரேஷ், கோவை ★

? மனைவியைக் கைக்குள் போடுவது எப்படி?

! ஒவ்வொரு மனைவியும் ஒரு ரகம். அதனால் இப்படியெல்லாம் பிறரிடம் ஆலோசனை கேட்டு வெற்றி பெறுகிற சமாச்சாரம் இல்லை இது. இருந்தாலும் பொதுவாக ஒன்று சொல்லலாம். ஸ்கூட்டர் அல்லது காரில் கிளட்சை நைஸாக விட்டுக் கொடுக்கும்போதே ஆக்ஸிலேட்டரை நாசூக்காக முடுக்கினால் வண்டி ஜெர்க் இல்லாமல் கிளம்பும். அனுபவத்தில் இது நன்கு பழகும் வரை கஷ்டம்தான். இல் வாழ்க்கையும் அப்படித்தான். சந்தர்ப்பங்களைப் பொறுத்து விட்டுக் கொடுக்கவும் வேண்டும்; கண்டிப்புக் காட்டவும் வேண்டும்—இரு சாரரிலும்.

○ எஸ். வெங்கட்ராமன், பம்மல்.

? சுஜாதா நடிப்பில் படத்துக்குப் படம் மெருகு கூடி வருகிறதே?

! தமிழ்த் திரை உலகில் உணர்ச்சிகரமான நடிப்பு என்ற தலைப்பில் யாராவது டாக்டர் பட்டத்துக்கு ஆராய்ச்சி பண்ணினால் அந்தக் காலத்துக் கண்ணாம்பா, பத்மினி, சாவித்திரி வரிசையில் லட்சுமிக்கு அப்புறம் சுஜாதா பற்றி நிச்சயம் எழுதியே தீர வேண்டும். இல்லையேல் டாக்டர் பட்டம் அம்பேல்!

○ ரம்யா, கோவை–16.

? ஒரு வாக்காளர் கடமை எதோடு முடிகிறது?

! பலர் நினைப்பது போல் வோட்டுப்போடுவதுடன் முடியவில்லை. அப்போதுதான் ஆரம்பம். உங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவரை குளவி கொட்டுவது போல் இல்லாவிடினும் தேனீ கொட்டுவது போல் கொட்டிக் கொண்டேயிருக்க வேண்டும்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

கோ. க. சுரேஷ்,
50. செங்குந்தர் வீதி,
இராம்நகர், கோவை–9.





ஆரோக்கியமான பற்களுக்கும் ஈறுகளுக்கும் என்றுமே ஆதாரம்
நம்பகமான கிராம்புத் தைலம் அது தருமே பரிகாரம்

**புதிய**

இதோ

# ப்ராமிஸ் டூத் பவுடர்

## காலங்காலமாக பயன்பட்டு வரும் கிராம்புத் தைலம் கொண்டது.

**கிராம்புத் தைலம் கொண்ட ப்ராமிஸ் டூத் பவுடர் அளிக்கும் நன்மையைப் பாருங்கள்.**

- வாய்த் துர்நாற்றத்தையும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளையும் அகற்றுகிறது.
- உங்கள் சுவாசத்திற்கு புத்துணர்ச்சியையும் தூய்மையையும் தருகிறது.
- உங்கள் ஈறுகளை இதமாகத் தேய்த்துக் கொடுத்து ஆரோக்கியத்தை உண்டாக்குகிறது.
- உங்கள் பற்களுக்கு பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது.
- பெப்பர்மிண்ட் மற்றும் கிராம்புத் தைலத்தின் இணையற்ற கலவை.




**பல்சாரா**

## கிராம்புத் தைலம் கொண்ட புதிய இணையற்ற ப்ராமிஸ் டூத் பவுடர்

CHAITRA-BLS-436 TAM

# "என் குடும்பத்தினரின் ஆரோக்கியத்தைப் பொறுத்தவரை நான் அசிரத்தையாக இருக்கவே மாட்டேன்"





வீலன் வாட்டர் ஃபில்டரில் ஒரு இணையற்ற 'லோ-ஹைட்' காண்டில் பொருத்தப் பட்டுள்ளது. அதன் விளைவாக, சீராகவும், வேகமாகவும் நீரை வடிகட்ட முடிகிறது.

குடிப்பதற்கு நீரைக் கொதிக்க விட்டால் மட்டும் போதாது. வீலன் வாட்டர் ஃபில்டரிலுள்ள 'லோ-ஹைட்' காண்டில் விசேஷ முறையில் அமைக்கப்பட்ட நுண்ணிய துளைகளைக் கொண்டதாகையால் மிகமிகச் சிறிய பதார்த்தங்களைக்கூட நன்கு வடிகட்டி, துல்லியமான நீரை மட்டுமே பெற வழி செய்கிறது... அதுவும் விரைவாக!

வெளிப்புறம் உறுதிமிக்கதாகும். இதன் கலம் திடமான பாலி ப்ரொபிலீனிலானது. அதனால் வீலன் வாட்டர் ஃபில்டர் விரிவதோ, நசுங்குவதோ, துருப்பிடிப்பதோ இல்லை.

ஆம். அதனால்தான் எந்த ஒரு தாயும் வீலன் வாட்டர் ஃபில்டரையே நம்புகின்றாள்.



விற்பனைக்கு விடுப்போர்:
**வோல்டாஸ் லிமிடெட்**
அப்ளையன்ஸெஸ் டிவிஷன்
19, ஜே.என். ஹெரெடியா மார்க்
பலார்டு எஸ்டேட்
பம்பாய்-400 038.




*நம்பகமான வீட்டுபயோக சாதனங்கள்*

CLARION/V/16/173 TAM

# நெருப்பு மலர்

4

அன்று காலையில் வெகு சீக்கிரமே எழுந்து விட்டான் அர்ஜுன். முதல்நாள் இரவு சமையற்காரரிடம் சொல்லி வைத்திருந்ததால் சரியாக ஐந்து மணிக்கெல்லாம் டீ வந்தது. சின்னப் பீங்கான் கெட்டிலின் டீ அந்த அதிகாலைக் குளிருக்கு இதமாகப் போர்த்திக் கொண்டு வந்திருந்தது. படுக்கையறைக் கதவை லேசாய் இரண்டு தரம் கைவிரல் முஷ்டியால் தட்டி உள்ளேயிருந்து வரச் சொல்லி உத்தரவு வந்த பின்னரே டீ தட்டுடன் நுழைந்தான் ராம்சிங். அவன் அந்த வீட்டில் முப்பது வருடங்களாக வேலையில் இருப்பவன். அர்ஜுன் பிறப்பதற்கு முன்பே வந்து சேர்ந்தவன். அவனை வேலைக்கு அமர்த்தியது அர்ஜுனின் அம்மா திவ்யாதான். திவ்யா. பெயருக்கு ஏற்ற மாதிரி திவ்யமானவள். அத்தனை அழகானவள். எல்லா குடகுப் பெண்களுமே அழகானவர்கள். பொன் நிறமும், வாளிப்பான உடம்பும், சளைக்காத உழைப்பும் அவர்களது தனியான அம்சங்கள். அத்தனை குடகுப் பெண்களையும் ஒன்றாக நிற்கவைத்தால், திவ்யாவைச் சட்டென்று தனியாக இனம் பிரித்துக் கண்டுபிடித்து விடலாம். அவ்வளவு வசீகரமான முகம். அந்த முக அழகிற்கும், மென்மையான சுபாவத்திற்கும் ஆசைப்பட்டே பிரிகேடியர் அவளைத் திருமணம் செய்து கொண்டார்.

ஒரு டிஸம்பர் விடுமுறையில் டில்லியைச் சுற்றிப் பார்க்க, ராணுவத்தில் பணிபுரிகிற தன் சித்தப்பாவிடம் வந்திருந்தாள் திவ்யா. ராணுவக் குடும்பத்தினருக்கான விருந்து ஒன்றில் அவளை எதேச்சையாகச் சந்தித்தார் பிரிகேடியர். அன்றைய விருந்து முழுவதும் கண்ணும், மனமும் அவளையே சுற்றிவரத் தூக்கமற்றுப் போனார். தம் பிள்ளையின் தவிப்பிற்கான காரணத்தைப் புரிந்து கொண்ட மேதப்பா ஒரே மாதத்தில் திவ்யாவைப் பாஸ்கரனுக்குக் கல்யாணம் பண்ணி அழைத்துக் கொண்டு வந்து விட்டார்.

திவ்யாவிற்கும் பிரிகேடியருக்கும் வயது வித்தியாசம் அதிகம். கல்யாணத்தின்போதே பிரிகேடியரின் முன் தலையில் ஏராளமான முடிகள் காணாமற்போயிருந்தன. காதோரங்களில் வெள்ளியிழைகள் பளபளத்தன. ஆனால் அவை எதுவும் அவர்களின் அன்பிற்குக் குறுக்கே நிற்கவில்லை.

வீட்டில் ஒரு பெண்ணின் கைவண்ணம் ஏராளமான வித்தியாசங்களைக் காண்பித்தது. சந்தோஷம் பிரவகித்தது. எப்போதும் சிரிப்புச் சத்தம் கேட்டது. எல்லாம் இரண்டே வருடங்கள் தான். அர்ஜுன் பிறந்த ஒரு மாதத்தில் வெறும் ஜுரத்தில் படுத்தவள், டைபாய்ட் காய்ச்சலில் நலிந்தாள். அத்தனை மருத்துவ உதவிகளை மீறி ஒருநாள் நள்ளிரவில் ஜன்னி கண்டு பிரிகேடியரின் கையைப் பற்றிக் கொண்டே திவ்யா உயிர் நீத்தபின் அதிகம் உடைந்து போனார் பாஸ்கரப்பா. சரியாக ஆறு மாதங்கள் யாரோடும் பேசாமல், மௌனமாக இருந்தார். நடுராத்திரியில் திவ்யாவின் புகைப்படத்தை எடுத்து வைத்துக் கொண்டு கதறுவார். அளவு தெரியாமல் குடிப்பார். காரை எடுத்துக் கொண்டு இந்த இடம் என்றில்லாமல் சுற்றுவார். சில சமயங்களில் தெருவோரம் காரை நிறுத்தி விட்டு, வீட்டிற்கு வரப் பிடிக்காமல் அதிலேயே தூங்கியும் போவார்.

அப்போதெல்லாம் வீட்டையும், குழந்தை அர்ஜுனையும் பொறுப்பாகக் கவனித்துக் கொண்டது இந்த ராம்சிங் தான். வேறு பெண் துணையின்றி அந்த ஒரு மாதக் குழந்தையை வளர்த்த பெருமையும், பாஸ்கரப்பாவைச் சொல்லிச் சொல்லி மாற்றின பெருமையும் அவனையே சாரும். அவன் பாதி மாற்ற — மீதிப் பாதியை இந்தியச் சீன யுத்தம் மாற்றி விட்டது. பிரிகேடியர் பாஸ்கரப்பா தம் கடமையையும், பொறுப்பையும் உணர்ந்து, திவ்யா ஒருத்தி மட்டும் உலகமில்லை என்பது பிடிபட, பழைய கம்பீரமும், விறைப்புமாக யுத்தத்திற்குப் புறப்பட்டுப் போனபோது ராம்சிங் அர்ஜுனைத் தூக்கி வைத்துக்கொண்டு டாட்டா காட்டச் செய்தான்.

அது மட்டுமில்லை.

''சோட்டா சாஹெப். அப்பா வெறும் பிரிகேடியர்தான். ஆனால் நீங்க ஜெனரலாகணும். அதைப் பார்த்தப்புறம்தான் இந்தக்

இந்துமதி

கிழவன் சாகப் போகிறேன். என்ன சாஹேப்...? என் காலத்துக்குள் நீங்க ஜெனரலாவீங்களா சாஹேப்...?''

—சொல்லிச் சொல்லி உடம்பு முழுவதும் ராணுவ ரத்தத்தை ஓட விட்டவன் அவன். சப்பாத்தி, சப்ஜியுடன் வீரத்தையும் கலந்து கொடுத்தவன்.

''அர்ஜுன் சாஹேப். பேருக்கு ஏற்ற மாதிரி வெறும் அழகாயிருந்தால் மட்டும் போருது சாஹேப். சண்டையில் அந்த அர்ஜுனன் எடுத்த பேரை நீங்க எடுக்கணும். அவனுக்கு வில் ஆயுதமாக இருந்தது என்றால் உங்களுக்கு ரைஃபிள் ஆயுதமாக இருக்கு. நீங்க ரைஃபிளைக் கையில் எடுத்தால் எதிரிகள் அலறணும். என்ன சொட்டா சாஹேப்...?''

மூன்று நான்கு வயதிலிருந்தே அவனுடைய தாத்தா சண்டையிட்ட விதம், அப்பா போராடிய முறை, மகாபாரதத்தில் 18 நாள் யுத்தம் எல்லாவற்றையும் கண் எதிரில் பார்க்கிற மாதிரி வர்ணித்தவிதம்...

அவைதான் அர்ஜுனை ராணுவத்தில் சேர வைத்தது. பரேட் சமயத்தில் ஜொலிக்க வித்தது. பொறுப்புணர்ச்சியும், கடமை தவறாத நிதானமும், இரண்டாவது லெஃப்டினெண்ட் என்று உயர்ந்து தற்போது காப்டனாக்கி இருந்தது. ஆனால் இவை எதிலும் ராம்சிங் திருப்தியடைந்த தில்லை.

''ம்ஹூம்... போருது அர்ஜுன் சாஹேப்...'' என்று தலையாட்டுவான்.

''உங்க திறமையைக் காட்ட ஒரு சந்தர்ப்பம் கூடக் கிடைக்கலையே... ஏதாவது ஒரு யுத்தம் உங்களுக்காகவாவது ஏற்படாதான்னு காத்துக்கிட்டிருக்கேன். அப்பா, தாத்தாவுக்குக் கிடைச்ச அதிர்ஷ்டம் உங்களுக்குக் கிடைக்கலையே சாஹேப்...'' என்று குறைப்பட்டுக் கொள்வான்.

அப்படிப்பட்டவனுக்கு அந்த வீட்டு மனிதர்கள், அவர்களின் பழக்க வழக்கங்கள், ருசிகள் எல்லாமே அத்துப்படி.. அடுத்து அவர்களின் வாயிலிருந்து என்ன வார்த்தை வரும் என்கிற வரையில் பிரிகேடியரையும், அர்ஜுனையும் மிகத் துல்லியமாகப் புரிந்து வைத்திருக்கும் ராம்சிங்கிற்கு அன்று காலை ஐந்து மணிக்கு அர்ஜுன் டீ கேட்டது ஆச்சரியமாக இருந்தது. இந்த முறை சென்னை போய்த் திரும்பியதிலிருந்து அவன் ஓரளவு மாறிப் போயிருந்ததைக் கிழவன் புரிந்து கொண்டிருந்தான். டெலிபோனில் பேசுவதை அநேகமாகத் தவிர்க்கிற அர்ஜுன் தற்போது ஒரு வார காலமாக நீண்ட நேரம் பேசுவதைக் கவனித்தான். பேச்சினிடையில் ஒரு பெண்ணின் பெயர் தட்டுப்படுவதையும் உணர்ந்து கொண்டிருந்தான். எப்போதாவது இவன் ஓடி வந்து டெலிபோனை எடுத்தால், ''மிஸ்டர் அர்ஜுன் ப்ளீஸ்...?''என்கிற இனிமையான குரலையும் கேட்டிருந்தான்.

அர்ஜுன் சென்னை சென்று திரும்பியதிலிருந்து தான் அந்தக் குரல் டெலிபோனில் கூப்பிடுகிறது. அர்ஜுன் அந்த கூப்பிடலுக்குக் காத்திருந்து ஓடிவருகிறான். முகத்தில் சந்தோஷம் பிரவகிக்கப் பேசுகிறான். மென்மையாகவும், இனிமையாகவும் வார்த்தைகள் வெளி வருவதை, ஆங்கிலம் புரியாது போனாலும் கிழவனும் உணர்ந்துகொள்ள முடிகிறது.

'யார் அந்தப் பெண்...?' என்பதைத் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டாலும் ஒன்றும் கேட்காமல் மௌனமாகவே இருந்தான். எதுவானாலும் அர்ஜுன் அப்பா



விடம் சொல்லுமுன் தன்னிடம் சொல் வான் என்கிற நம்பிக்கை இருந்தது. ஆனாலும் அன்று காலை எழுந்து டீ போடு கிற வரை தாங்கியவன் அதற்கு மேல் தாங்க இயலாமல் மெதுவாகத் தானே பிரஸ்தாபிக்க முடிவு செய்து ''குட்மார்னிங் சோட்டா சாஹேப்...'' என்றான்.

படுக்கையை விட்டு இன்னமும் எழுந் திருக்க மனம் வராமல் ரஜாயை இழுத்துப் போர்த்திக் கொண்டிருந்த அர்ஜுன், ராம்சிங்கின் குரல் கேட்டு சந்தோஷமாகச் சிரித்துக் கொண்டே பதில் குட்மார்னிங் சொன்னான். கட்டிலின் பக்கத்திலிருந்த சின்ன ஸ்டூலில் ட்ரேயை வைத்து ஆவி பறக்கும் டீயைக் கோப்பையில் ஊற்றிக் கொண்டே மெல்லக் கீழ்க்கண்ணால் அர்ஜுனைப் பார்த்தான் ராம்சிங்.

''ஒரு வாரமாக சோட்டா சாஹேப் முகத்தில் என்ன இவ்வளவு சந்தோஷம் தாண்டவமாடுகிறது...?''

அதைக் கேட்டு அர்ஜுனின் முகத்தி லிருந்த சிரிப்பு இன்னமும் கூடிற்று.

''பத்து நாட்களாக ராம்சிங்கைப் பார்க் காமல் மெட்ராஸில் இருந்து விட்டு வந்து இப்போது பார்க்கிறேன் இல்லையா... அது தான் சந்தோஷம்...''

''இந்தக் கிழவனுக்கு ஏற்கெனவே காது குத்தியிருக்கிறது சாஹேப்...'' என்று பெரிதாய்ச் சிரித்த ராம்சிங்,

''அப்படியானால் டெலிபோனில் பேசுகிற போது ஏற்படுகிற சந்தோஷம் கூட இந்தக் கிழவனோடு பேசுவதால் ஏற்படுகிற சந்தோஷம் தானா சாஹேப்...?''

''என்ன...? என்ன...?'' — அர்ஜுன் அதிர்ந்து அவனைப் பார்த்தான்.

''ஒரு வாரமாக 'மிஸ்டர் அர்ஜுன்' ப்ளீஸ்...?' என்று கேட்கிற குரல் கூட இந்தக் கிழவனுடையதுதானா சாஹேப்...?''

டீ கோப்பையைக் கீழே வைத்த அர்ஜுன் பெரிதாய்ச் சிரித்தான். 'புத்தி சாலிக் கிழவன்' என்று முணுமுணுக்க,

''என்ன சாஹேப்...?'' என்று நமுட்டுச் சிரிப்புடன் தலையை உயர்த்தினான் ராம்சிங்.

அர்ஜுனை இந்த இருபத்தொன்பது வருடங்களில் மிக நன்றாக அறிந்தவன் ராம்சிங். கல்லூரி நாட்களில் கூட அவனைத் தேடி எந்தப் பெண்ணும் வந்ததில்லை. யாருடனும் அவன் அனாவசியமாகப் பேசிய தில்லை. ராணுவக் குடும்பத்தினர்களுக்காக வைக்கப்படுகிற விருந்துகளில் மரியாதை கருதிக் கலந்து கொள்வானே தவிர விருப்பப் பட்டதில்லை. இரவுகளில் நீண்ட நேரம் கண் விழிப்பதில்லை. அளவிற்கு மீறிக் குடிப்ப தில்லை. அவனிடம் அதிகபட்சமாக ஒட்டிக் கொண்டிருந்த ஒரே கெட்ட பழக்கம் புகைபிடிப்பது. அதை மட்டும் அவனால் தவிர்க்க முடிந்ததில்லை. அதுவும் பிரிகேடிய ரின் எதிரில் பிடிக்க மாட்டான். வீட்டில் தன் அறைக்குள் கூட புகைப்பதில்லை. எப்போதாவது புகைக்க நேர்ந்தால்,

''அப்பா, இப்போ மேலே வரமாட் டாரே ராம்சிங். வந்தால் ஒரு குரல் கொடுங்களேன்...'' என்று முன்னெச்ச ரிக்கையாகச் சொல்லி விடுவான். அப்படிப்பட்ட கட்டுக்கோப்பில்நின் றவன் மாலை வீட்டினுள் நுழை கிறபோதே ''ஏதாவது டெலி போன் வந்ததா ராம் சிங்...?'' என்று கேட்பதும், குறிப்பிட்ட அந்தக் குரல் ஒலிக்கிற வரை நிலையில்லாமல்




மூன்றாவது பிரச்சினையைத் தீர்ப்பது மிக எளிது.
அதற்கு உதவுது—டார்டாய்ஸ்




பூமி நடுங்கும்படி புகைகொண்டு துரத்துங்கள் கொசுக்களை
அதற்கு உதவுகிறது—டார்டாய்ஸ்






இராத் தூக்கத்தை இழக்காமலிருக்க உதவுகிறது—டார்டாய்ஸ்




பிடுங்கியெடுக்கும் கொசுக்களை அடியோடு விரட்டி அடிக்கிறது—டார்டாய்ஸ்

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.






தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
ஃபோர்ட், பம்பாய்-400 023. ஃபோன்: 273831

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்: ஷாந்திலால் பிரதர்ஸ்,
7, காசிச் செட்டி சந்து, 2வது மாடி, சென்னை-600 001 தொலைபேசி: 32886

தவிப்பதும், பின்னர் அத்தனை தவிப்பும் அடங்கி நீண்ட நேரம் பேசுவதும்...

அர்ஜுன் சிறிது நேரத் தீவிர யோசனைக்குப் பின்னர் ராம்சிங்கிடம் கிருத்திகாவைப் பற்றிய விவரத்தைச் சொல்ல முடிவு செய்து, மெதுவாக ரயிலில் அவளைச் சந்தித்ததில் ஆரம்பித்து, பின்னர் மிராண்டா கல்லூரியில் சேர்த்து விட்டு வந்தது, தினமும் ஒரு முறை போய்ப் பார்ப்பது, தேவையான உதவிகளைச் செய்வது, அத்தனையும் சொல்லி முடித்தான். இடையில் குறுக்கிடாமல் அத்தனையையும் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான் ராம்சிங்.

''நீங்க சொல்றதைக் கேட்டால் அந்தப் பொண்ணு ரொம்ப நல்ல பொண்ணாக இருக்கும்னு தோணுறது அர்ஜுன் சாஹப்.''

''ரொம்ப நல்ல பொண்ணு ராம்சிங்..''

''ம்ஹூம்...'' என்று குறும்பாகச் சிரித்தான் ராம்சிங்.

''உங்க சந்தோஷத்தைப் பார்த்தால் இது வெறும் நட்பாக மட்டும் நிற்காதுன்னு தோணுறதே...?''

அதைக் கேட்டுக் கால் விநாடி யோசித்த அர்ஜுன் பின்னர் உருக்கமான குரலில் சொன்னான்.

''இது வெறும் நட்பாக மட்டும் போய் விடக் கூடாதே என்றுதான் தினமும் வேண்டிக் கொண்டிருக்கிறேன் ராம்சிங்...''

அந்தப் பதில் நெஞ்சைத் தொட ராம்சிங் அர்ஜுன் அருகில் வந்து தோளில் கைவைத்து மிகுந்த பாசத்தோடு பேசினான்.

''போகாது சோட்டா சாஹேப். போக விடமாட்டான் இந்த ராம்சிங். இத்தனை வருடங்களில் நீங்க எதன் மீதும் ஆசைப் பட்டு நான் பார்க்கலே. எதுவும் உங்களுக்கு வேணும்னு நீங்க நினைச்சதில்லே. முதல் முதலா நீங்க இந்தப் பொண்ணு மேல ஆசைப்படறீங்க. அதனால் இது நிச்சயம் சாதாரண நட்பாக நிற்காமல் கல்யாணத்தில் முடியணும் சாஹப். ஆமாம். இது அப்பாவிற்குத் தெரியுமா...?''

''ம்ஹூம்.''

''தெரிந்தால் ரொம்ப சந்தோஷப்படுவார் அர்ஜுன்...''

''நிஜம் தான் ராம்சிங்...''

''நீங்க சொன்னதைக் கேட்டப்புறம் எனக்கும் அந்தப் பெண்ணைப் பார்க்கணும்னு தோணுறது சாஹப்...''

''நானே அழைத்துக் கொண்டு வந்து அப்பாவுக்கு அறிமுகப்படுத்தணும்னு நினைத்துக் கொண்டிருக்கிறேன், ராம்சிங்''

''எப்போ...?''

''அநேகமாக இங்கிக்கே கூட அழைத்துக் கொண்டு வருவேன். இன்று ஆக்ரா கூட்டிக் கொண்டு போய் தாஜ்மஹால் காட்டணும்னு தான் சீக்கிரம் எழுப்பச்சொன்னேன். பாவம் அவள் ஹாஸ்டல் வாசலில் எனக்காகக் காத்துக் கொண்டு நிற்பாள்...''

''ஹரே... அப்படியானால் சீக்கிரம் கிளம்புங்கள் சாஹப்.''

டவலோடு அவன் குளியலறைக்குள் நுழைவதற்கு முன் ராம்சிங் கடைசியாகக் கேட்டான்.

''மேம் சாஹிப் பெயர் என்னவென்று சொல்லலையே அர்ஜுன் சாஹப்...?''

''கிருத்திகா.''

(தொடரும்)

---

# முத்ரா வழங்கிய பவித்ரா

ஒரு சிற்பி. அவனது அழகான மனைவி. சிற்பிக்குப் பாராட்டுத் தெரிவிக்க வந்து போகும் ஒரு நாடக நடிகன். போட்டி ஒன்றுக்குச் சிற்பம் தயாரிக்கச் சொல்லி விட்டு, சிற்பி இரவு பகலாக அதில் மூழ்கி விட்ட போது அவனது அழகான மனைவியை வசப்படுத்தி விடுகிறான் நடிகன். 'ஒரு மனைவியிடம் காண்பிக்க வேண்டிய அன்பு, பாசம் இவற்றைக் காண்பிக்கத் தவறி விட்டீர்கள்' என்று குற்றம் சாட்டிவிட்டுச் சிற்பியிடமிருந்து வெளியேறுகிறாள் மனைவி-பவித்ரா.

நடிப்பைப் பொறுத்தவரை அரவிந்த், ஸ்ரீசுபா, பாலாசிங் எல்லோருமே அதிக உணர்ச்சி வசப்படாமல் வெகு தெளிவாய்ப் பாத்திரத்தை உணர்ந்து செய்திருக்கிறார்கள். தியேட்டர் வகை நாடகங்களுக்குத் தேவையான ஒளி அமைப்பும் வெகு கச்சிதம்.

லா. ச. ரா.வின் நாவல் 'அபிதா'வை மேடைக்குக் கொண்டு வந்தவர்கள் என்று முத்திரை குத்திக் கொண்ட 'முத்ரா' குழுவினரின் இரண்டாவது முயற்சி இது. இந்த 'பவித்ரா' நாடகத்தின் ஆதாரம் ஒரு செக்கோஸ்லோவாக்கிய திரைப்படமாம். ஒரு மணி - ஒன்றரை மணி அளவு 'தியேட்டரு'க்குத் தமிழில் கதைகளா இல்லை? முத்ரா இன்னும் கொஞ்சம் சிரமப்பட்டாவது தேடி முழுமையான தமிழ்ப் படைப்புக்களைத் தொடர்ந்து தரலாமே.

— சாருகேசி





> ''இந்தியாவின் ஒரே பிரச்னை இந்திராதான்'' என்று திரு. எம். வி. காமத் ஒரு கூட்டத்தில் பேசியதை யொட்டியும் வெட்டியும் எழுதுமாறு நேயர்களைக் கேட்டிருந்தோம். விவாதத்தை இருவர் இந்த இதழில் ஆரம்பிக்கிறார்கள்...

**ஆமாம் என்கிறார் ஸ்ரீமதி விஜி.**
**சென்னை**

# இந்தியாவின் ஒரே பிரச்னை

சரியாகத்தான் சொல்லியுள்ளார் எம். வி. காமத்

இந்திராகாந்தியின் அனைத்துச் செயல்களும், தான் பதவியில் இருக்க வேண்டும், மகனுக்குப் பட்டம் கட்ட வேண்டும் (முதலில் சஞ்சய் இப்போது ராஜீவ்) என்ற நினைப்பையே எடுத்துக் காட்டுகின்றன.

சுயநலத்திற்காகச் சமூக உணர்வுகளையும் ஜனநாயகக் கொள்கைகளையும் காற்றில் பறக்க விடுவதில் சிறிதும் தயக்கம் காட்டாதவர் என்பது கண்கூடு. அவ்வப்போது சில 'மாயா ஜாலங்''களையும் 'தமாஷ்'' களையும் செய்து மக்களின் கவனத்தைத் திசை திருப்பித் தனக்கு வேண்டியதைச்சம்பாதித்துக் கொள்வதில் இவருக்கு நிகர் இவரேதான்.

விலைவாசியைக் கட்டுப்படுத்தி, பொருளாதார அபாயத்திலிருந்து நாட்டுமக்களைக்காப்பாற்ற வேண்டுமெனும் தாபம் அன்னையாருக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

சான்றாகப் பல உதாரணங்களைக் கூறலாம். ஆனால் கல்கி ஆசிரியர் ஒதுக்கியுள்ளதோ மிகக் குறைந்த இடமே. ஒரு சில உதாரணங்களை மாத்திரம் சுருக்கமாக எடுத்துக் காட்ட விழைகின்றேன்.

**அஸ்ஸாம் பிரச்னை**

வெளிநாட்டினரின் ஊடுருவல் நடைபெற்று இன்று விஸ்வரூபம் எடுத்துள்ள இந்தப் பிரச்னை நாடு மொத்தத்திற்கும் ஏற்பட்டுள்ள அபாயமாகும். இன்னமும் ஊடுருவல் நடந்து கொண்டுதான் இருக்கின்றது. சரியான நடவடிக்கை ஏதும் எடுக்காமல் மக்கள் கருத்தைப் புறக்கணித்துக் குழப்பத்திலேயே தேர்தலை நடத்திய பிரதமரின் சாதனையை என்னவென்று கூறுவது?

**பஞ்சாப்**

அன்னை இந்திராவின் பிரித்தாளும் ''கபட'' திருவிளையாடல்களில் ஒன்றுதான் பஞ்சாப் பிரச்னை. பிந்தரன்வாலே வளர்வதற்கு உதவியவர் இவர்தானே? வன்முறையைக் கண்டும் காணாமல் இருந்ததை யாரால் மறுக்க முடியும்? அரசியல் சட்சியாகிய அகாலி தளத்தை நசுக்க அவர் உபயோகப்படுத்திய ஆயுதமே இந்தப்பிரச்னையின் இன்றைய பூதாகாரமான வடிவம்.

**ஏஷியாட்—82:**

அடுத்த வேளை உணவு வருமோ, வராதோ என்று தவிக்கும் பெரும்பாலான மக்களின் பிரதிநிதி மேடம் காந்தியின் ஆட்சியில் நடைபெற்ற இந்த ''கூத்தை''ப் பற்றி என்னவென்று கூறுவது? பல்லாயிரம் கோடி ரூபாய்களை I M F—லிருந்து கடன்—ஏஷியாட் கபளீகரம் செய்துள்ளதை நாம் நன்கு அறிவோம்.

---



''தனக்குத்தெரியாதவைகளைப்பற்றி கேள்விகள் கேட்பவன் ஐந்து நிமிடங்களுக்கு முட்டாளாக மற்றவர்களுக்குத் தென்படுவான். கேள்விகள் கேட்கத் தயங்குபவன், வாழ்நாள் முழுவதும் முட்டாளாக இருப்பான்.''

—'யாரோ'

—எஸ். வெங்கட்ராமன்

ஆடம்பர விளையாட்டு அரங்குகளையும் உல்லாசமான ஐந்து நட்சத்திர விடுதிகளையும் அமைத்து அதற்கான செலவுகளை அவசியம் என கருதுகின்றது நமது சோஷலிச அரசு! ஆயிரக்கணக்கான பின்தங்கிய கிராமங்களில் குடிநீர் வசதி அடிப்படைக் கல்வி மற்றும் சுகாதார வசதிகள் இல்லாமல் மக்கள் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் இவ்வேளையில் இவ்விதமான ''தமாஷ்''கள் தேவைதானா?

காங்கிரஸ் பிளவு பட்டபோது நடைபெற்ற ''மனசாட்சி'' நாடகம், அலகாபாத் கேஸ் விவகாரம் மற்றும் அதனுடன் வந்த எமர்ஜென்சி, அப்துல் ரக்மான் அந்துலே விவகாரம், கர்நாடகத்தில் டேப் விவகாரம், ஃபரூக் அப்துல்லாவை இறக்கிய விதம் போன்றவைகள் மேடம் காந்தியின் ''அபார''த்திறமைக்கு மேலும் சில உதாரணங்கள்.

அன்னையாரின் ஆட்சியில் நமக்குப்பிரச்னை இல்லாமல் தாராளமாகக் கிடைப்பது ஒன்றுதான். ''கரீபி அடாவோ'', ''ஷ்ரம மேவ ஜயதே'', ''சோஷலிசம்'' போன்ற கவர்ச்சிகரமான கோஷங்கள் தான். மேலும் ஊழல் இலாகாக்களுக்கும், ஜாலராக்களுக்கும் தான் இன்று நாட்டின் தலைமை பங்கு போடப்பட்டு வருகின்றது.

# இந்திராவா?

இல்லை என்கிறார் திரு. சாவடி பொன் சிதம்பரம், ஆழ்வார்குறிச்சி

இந்த நாட்டில் உள்ள பல பிரச்னைகளைச் சமாளிக்கும் ஒரு நபர் இந்தியாவில் இருக்கிறார் என்றால் அது இந்திராகாந்தி ஒருவர்தான்.

தான் தோன்றித்தனமாகப் பத்திரிகையில் எழுத பேச இந்த எம். வி. காமத் போன்றவர்களால் முடிகிறது என்றால் அது இந்திரா ஆளும் இந்திய நாட்டில்தான். ரஷ்யாவிலோ, சீனாவிலோ முடியுமா?

பிரபலமடைய வேண்டும் என்பதற்காக இந்திராவைத் தாக்கிப் பேசுகிறார் திரு. காமத். உண்மையிலேயே மனம் திறந்து பேசவில்லை.

இங்கிலாந்தினால் ஆளப்பட்ட இந்தியா இன்று தலைநிமிர்ந்து நிற்பதற்குக் காரணம் இந்திராதான்.

பிரிட்டிஷ் பிரதமர் ஆலோசனை கேட்கும் அளவிற்கு எவரெஸ்ட் சிகரமாக உயர்ந்திருக்கிறார் நமது பிரதமர்



இன்று கூட்டு சேரா நாடுகளின் தலைவியாக நம் பிரதமர் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது நம் நாட்டிற்கே பெருமை.

இந்திராதான் பிரச்னை என்பதை நானும் ஒப்புக் கொள்கிறேன். எதற்கு என்றால் 1. கடத்தல்காரர்களுக்கு, 2. கொள்ளை லாபமடிக்கும் வியாபாரிகளுக்கு, 3. மதம், மொழி, சுயாட்சி என்ற பெயரால் தேசிய ஒருமைப்பாட்டைச் சீர்குலைப்பவர்களுக்கு, 4. காமத் போன்ற பொறுப்பில்லாமல் பேசும் எழுத்தாளர்களுக்கு, 5. சமாதானத்தை விரும்பாதவருக்கு, 6. கோஷ்டி சேர்ந்து மோசடி செய்பவருக்கு. இன்னும் இதுபோல் சமூக விரோத நடவடிக்கைகளில் ஈடுபடுவோருக்கெல்லாம் இந்திரா இருப்பதே பிரச்னை தான்.

பார்த்தோமே! மொரார்ஜி பிரதமராக இருந்த நேரத்தில் தங்களுக்குள் பதவி வெறியால் பதவி போனதை.

இன்று குமரி முதல் இமயம் வரை 68 கோடி மக்களின் நம்பிக்கை நட்சத்திரம் இந்திராகாந்தி ஒருவர்தான். இவரால் தான் நாம் உலக அரங்கில் நிமிர்ந்து நிற்கிறோம். இது பொறுக்காத காமத் போன்றோரை இந்தியர் என்று சொல்வதையே வெறுக்கிறேன்.

---

பஞ்சாப் கலவரத்தையொட்டி ஜம்மு—காஷ்மீர் மாநிலத்தைச் சுற்றி பார்க்க வரும் வெளிநாட்டினரின் எண்ணிக்கை 75 சதம் குறைந்து விட்டது. இவ்வாண்டு இந்திய அரசாங்கம் 32 கோடி டாலர் வருமானம் வருமென எதிர்பார்த்தது. ஆனால் இந்த 75 சதம் மக்கள் வருகைக் குறைவினால் 12 கோடி டாலர்களே கிடைக்குமென எதிர்பார்க்கப்படுகிறது. இலங்கை வானொலியில் கூறக் கேட்டவர் :

எம். கண்ணன்.



# சொல்லுங்களேன்!
# குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்கிய பானமாக ஹார்லிக்ஸ் இருப்பது ஏன்?

## ரூ.5 லட்சத்திற்கும் அதிகமான பரிசுகளைப் பெறுங்கள் தமிழ் நாட்டில் மட்டுமே!



### முதல் பரிசு

ரூ. 75,000க்கும் அதிகமான பெறுமானமுள்ள ஒரு சொகுசு அம்பாசடர் மார்க் IV கார்.



### 5 இரண்டாவது பரிசுகள்

மின்னும் தங்கநகை செட்டுகள், ஒவ்வொன்றும் ரூ. 25,000 மதிப்புடையது.



### 200 மூன்றாவது பரிசுகள்

அருமையான ஃபிலிஃப்ஸ் 'டு-இன்-ஒன்', ஒவ்வொன்றும் ரூ. 1,500-க்கும் அதிகமான மதிப்புடையது.

மேலும்

**800 முந்திக் கொண்டோர் பரிசுகள்!**
மாதத்தில் இரண்டுமுறை, முதல் 200 பூர்த்தியான நுழைவுத்தாள்கள் ஒவ்வொன்றுக்கும் ரூ. 50 பெறுமான பரிசு.

8320



# உள்ளேயும் சில காயங்கள்

நா. நாகராஜன்

**வா**சல் கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே நுழைந்தாள் விஜயா. வீடே வெறிச்சென்றிருந்தது. எவ்வளவு நேரம் தான் தெருவையே வேடிக்கை பார்ப்பது. தனிமை அவளுக்குப் பழக்கமானதுதான். ஆனால் இன்று அதன் அழுத்தம் அவளை வதைத்தது. ஜன்னலின் அருகே இருந்த சோபாவில் வந்தமர்ந்து எதிரே டிரேயிலிருந்த கவரை எடுத்துப் பிரித்தபோது மனம் பதைக்க மறுபடியும் கண்கள் அந்த நெருப்பு வரிகளை வலம் வந்தன.

'கவரை' மடித்து மறுபடியும் டிரேயில் வைத்தாள். கண்களை மூடிக் கொண்டாள். மூடிய விழியிடையே முத்துப்போல் நீர் தேங்கியது.

கண்ணாடியில் தன்னைப் பார்த்தாள். கண்கள் கலங்கி, சிவந்திருந்தன. முகம் வீங்கியிருந்தது. கீழுதட்டைப் பற்களால் கடித்து அழுகையை அடக்க முயன்று தோற்றுப் போனாள்.

கண்ணாடியின் அடுத்து மாட்டப்பட்டிருந்த அந்தப் புகைப்படத்தைப் பார்த்ததும்... அதில் முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு, மாறு கண்ணும் அம்மைத் தழும்புமாய் அவளை முறைக்கும் கணவன் பாஸ்கரின் முகத்தைப் பார்த்ததும்... அவள் துக்கம் பன்மடங்காகியது.

பாஸ்கர் எல்லோரையும் போல் சகஜமாக இல்லாமல்... நாலு பேருடன் பேசிப் பழகாமல்... மனைவியைக் கொஞ்சமும் மரியாதையாய் நடத்தத் தெரியாமல்... யாரையும் நம்பாமல்... தனக்குத்தானே ஒரு தனி உலகத்தை நிர்மாணித்துக் கொண்டு அதில் எல்லாமே தானாய்... என்ன வாழ்க்கை!

அவனின் முன் கோபம், கொஞ்சம் முரட்டுத்தனம், யாரிடமும் பழகாத, பழக விடாத சுபாவம், இவையெல்லாம் அவளை அவனிடமிருந்து பிரித்தது என்பது அவனுக்குத் தெரியாததுதான். தெரிந்தாலும் கவலையில்லை. அவள் அவனுக்குச் சொந்தமானவள். அவ்வளவே!

நினைத்துப் பார்க்கையில் சூடாகக் கண்ணீர் இறங்கியது. கவரில் அம்மா எழுதியிருந்த வார்த்தைகள் அம்மாவே நேரில் பேசுவதைப் போலிருந்தது.

''விஜி நேற்று காலை தந்தி வந்தது. மணி போய்ட்டானாம். நானும் அப்பாவும் நாகர்கோவில் கிளம்பறோம். நான் அங்கே கொஞ்சநாள் இருந்து விட்டுத்தான் வருவேன். நீ முடிஞ்சா ஒரு எழுத்து எழுதிப் போடு...'' கடிதம் முடியவில்லை. அவளால் மேற்கொண்டு படிக்க முடியவில்லை.

சோபாவின் பின்பக்கத்தில் சாய்ந்து கொண்டு கண்களை மூடிக் கொண்டாள். நித்திரை வரவில்லை. மனத்திரையில் பழைய நினைவுகள்தான் வலம் வந்தன. மணி... மணி... மணி... மனமெல்லாம் அவனுடன் போனான்.

''மணி என்னைக் கல்யாணம் பண்ணிப்பியா?'' வார்த்தையின் அர்த்தம் கூட சரியாகப் புரியாமல் பெற்றோர்கள் சொன்னதை ஆசையாக வெளிப்படுத்தும் அறியாப் பருவம்.

''சீய்... இந்த மூஞ்சியை யாரு கல்யாணம் பண்ணிப்பாங்க. நான் மாட்டேன். அழகா, புத்திசாலியா இருக்கிறவங்களைத்தான் நான் பண்ணிப்பேன்.''

''நீ மட்டும் ரொம்ப அழகோ...?''

''போடி போ. ஆம்பளைக்கு அழகு முக்கியமில்லை.''

''அதனாலே தான் நீ அழகா இல்லையோ?''

சளைக்காமல் பேசுவார்கள். கடைசியில் அவள், ''அம்மா, பாரும்மா, மணி கிண்டல் பண்றான்'' என்று அம்மாவிடம் தஞ்சமாவாள்.

அம்மா சிரித்துக் கொண்டே விஜிக்குச் சமாதானம் சொல்வாள். ஒவ்வொரு முறை விடுமுறைக்கு மணி வரும்போதும் வீடு கலகலப்பாகி விடும். விஜி ஒரே பெண்ணானதால் அதுவரை அமைதி காத்து வந்த வீடு களை கட்டும்.

நாட்கள் நகர நகர இந்த விளையாட்டுக்கள் குறையத் தொடங்கின. அவள் அவனை வியப்புடன் பார்த்தாள். காலேஜில் முதல் ரேங்க் எடுப்பதையும், குற்றாலத்தில் நடந்த கவிதைப் போட்டியில் முதல் பரிசு பெற்றதையும் கடிதம் வந்த நாள் முழுக்க எல்லோரிடமும் சொல்லிச் சந்தோஷித்தாள். உள்ளுக்குள் 'என்னுடைய மணி' என்று அடிக்கடி சொல்லிக் கொண்டாள்.

அவன் விடுமுறைக்கு வந்தபோது அவனை உட்கார வைத்து, தான் வீணை கற்பதைச் சொல்லி அவனை ஆச்சரியப்படவைத்து வீணையில் சின்னஞ்சிறு இனிய மீட்டிக் காண்பித்தாள். அந்த சந்தோஷ மீட்டலில்,

''மணி என்னை நீ கல்யாணம் பண்ணிப் பியா?'' என்ற கேள்வி இருந்தது.

**வி**டுமுறை நாட்களில் ஒருநாள் விஜிக்கு மூக்கு குத்திவிட வீட்டில் தீர்மானித்து விட்டனர். கடைக்குப் போய் மூக்குத்தி வாங்கி வரவும், புதிதாய் விஜிக்கு ஒரு புடைவை எடுக்கவும், எண்ணியபோது விஜியின் அப்பா 'எனக்கு வேலை நிறைய இருக்கிறது' என்று சொல்லிவிட்டார்.

விஜி, அம்மா, மணி மூன்று பேரும் மட்டும் கிளம்பினர். அவனுடன் நடந்து போவது சந்தோஷமாக இருந்தது. அம்மா கூட மனநிலையைப் புரிந்தவள் மாதிரி தொணதொணக்காமல் வந்தாள்.

**சா**லை பஜாரில் இறங்கி வெங்கடேஸ்வரா ஜுவல்லரியில் ஒரு மூக்குத்தி வாங்கிக் கொண்டார்கள்.

''புடவை ஸெலக்‌ஷன்என்னுடை யதுதான் ஓ.கே.?'' என்று முதலில் சொல்லிச் சம்மதம் வாங்கி விட்டான் மணி.

அரைமணி நேரம் அலசி ஆராய்ந்தபின் க்ரேயும் வெள்ளையும் கலந்து, சின்ன பூக்கள் சிதறியிருந்த ஒரு புடைவையை செலக்ட் செய்த போது விஜிக்கு சந்தோஷம் பொங்கியது.

''ஹாய்... ஹவ் இஸ் இஸ்...''

''பைன்...'' என்றான்.

வீடு திரும்பினர்.

நாலு மணிக்கு வருவதாகச் சொன்ன ஆசாரி மூன்றரைக்கே வந்து விட்டார்.

விஜிக்கு பயமாக இருந்தது. 'வலிக்குமாம்மா ரொம்ப? என்று அம்மாவைக் கேட்டாள். 'வலிக்காது' என்று சொன்ன அம்மாவின் குரலில் வலி இருந்தது.

விஜியின் கண்கள் மணியைத் தேடின.

காணவில்லை.

ஒரு நிமிஷம்... ஒரே நிமிஷத்தில் சுருக்கென்று வலி. கண்களில் நீர் வழிந்தது.

அம்மாவையும் அப்பாவையும் நமஸ்கரித்து விட்டு மாடிக்கு விரைந்தாள். மணி பால்கனியில் நின்று கொண்டிருந்தான். விஜியின் வருகையை உணர்ந்து திரும்பினான்.

''என்ன மணி இவ்வளவு நேரம் இருந்து விட்டு இப்போ பார்த்து மாடிக்கு வந்துட்டியே: நீ அந்த விசேஷத்தைப் பார்க்க வேண்டாமா? நிமிஷத்தில குத்திட்டார். எப்படி இருக்கு? நான் இன்னும் கண்ணாடி கூடப் பார்க்கலே...''

''விஜிம்மா என்னால அதைத் தாங்கிக்க முடியாது. இவ்வளவு நேரம் நான் இங்கே நின்னுக்கிட்டு இருந்தாலும் என் மனசு அங்கேயேதான் சுத்திச் சுத்தி வந்துக்கிட்டிருந்தது. ரத்தம் அதிகம் வரலியே? வலி ஜாஸ்தியா...? ஆனா இந்த மூக்குத்தி உன் முகத்துக்குப் புது அழகைக் கொடுக்குது விஜிம்மா...!''

''அப்போ! இப்போ வலியில்லே, இந்த வார்த்தையைக் கேட்டப்புறம்'' என்றாள்.

மறுநாள் மணி புறப்பட்டுப் போனான்.

**அ**வன் ஊர் போய்ச் சேர்ந்த மறு மாதம் ஒரு கடிதம் வந்தது. மணி எழுதவில்லை. அவன் அம்மா தான் எழுதியிருந்தாள். அப்பா அந்தக் கடிதத்தை அவளிடம் காட்டவில்லை.



அடுத்த மாதம் அந்தக் கடிதத்தின் செய்தி அவளுக்குத்தெரிய வந்தது. எதிர்பாராத ஒருநாளில் அத்தையும், மணியும் வந்து இறங்கிய போது அவள் மிகவும் சந்தோஷப்பட்டாள். ''மணி என்ன இடீர்னு வந்திருக்கே! எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா? இன்னிக்குக் காலம்பற கூட உன்னைப் பத்தி நினைச்சேன். அநேகமா உன்கிட்டேயிருந்து லெட்டர் வரும்னு எதிர்பார்த்தா ஆளே வந்து நிக்கறே!''

அவள் பேச்சை, குழந்தை போல குதூகலப்படுவதைக் கண்டு மணி லேசாகச் சிரித்தான். அவனும் அவன் அம்மாவும் இவளுக்குக் கடிதத்தின் விவரம் தெரியாது என்று தெரிந்து கொண்டனர்.

அன்று இரவு விஜி அதிக நேரம் மணியுடன் பேசிக் கொண்டிருந்தாள். இரவு உறக்கம் வரவில்லை. மணி தூங்கிப்போனான். கொஞ்ச நேரத்தில் அடுக்களை விளக்கின் ஸ்விட்ச் தட்டப்படும் சத்தம் கேட்டது.

''நாளைக்கு ஆஸ்பத்திரிக்குப் போகும் போது எப்படியும் விஜிக்கு விஷயம் தெரியத் தானே போகிறது. அவள் ஒரு குழந்தை மாதிரி. இன்னும் அதே பழைய பிரியத்துடன் வேறுபாடு இல்லாமல் பழகுறாள். எப்படி இந்தச் செய்தியை ஜீரணித்துக் கொள்ளப் போகிறாளோ...'' அவர்கள் பேச்சின் தொடர்ச்சியிலிருந்து விஜி புரிந்து கொண்டாள். மணிக்கு கேன்ஸர். டெஸ்ட் பண்ணிப் பார்த்ததில் ஊர்ஜிதமாகி விட்டது. நாளைக்கு ட்ரீட்மெண்ட் கொடுக்க மணி அழைத்து வரப்பட்டிருக்கிறான்.

இந்தச் செய்தி அவளுள் விஷமாக இறங்கியது. உடலெல்லாம் பற்றி எரிவதைப் போலிருந்தது. இதுநாள்வரை மறைத்து வைத்திருந்த அப்பா, அம்மாவின் மேல் எல்லையில்லாக் கோபம் வந்தது.

**ம**றுநாள் காலை தான் காலேஜிற்குப் போகப் போவதில்லை என்று சொன்னபோது அத்தனை பேருக்கும் சங்கடமாக இருந்தது.

---

''கல்யாண வீட்டுக்காரர் வள்ளல் அதியமானுக்குச் சொந்தக்காரர்கள் போல் தெரிகிறது என்கிறீர்களே எப்படி ''

''தாம்பூலப் பையில் நெல்லிக்கனி போட்டுக் கொடுத்திருக்கிறார்கள்.''

—இ. சந்தரேசன்.



''என்ன விஜி குழந்தை மாதிரி, நாங்க எங்க ஓடியாப் போயிடப் போறோம்?'' — அவன் முடிக்கும் முன்பாகவே விஜி குறுக்கிட்டாள்:

''வேண்டாம் மணி, என்னிடம் மறைக்காதீர்கள். எனக்கு எல்லாமே தெரியும்.''

அதற்குப் பிறகு யாரும் எதுவும் பேசிக் கொள்ளவில்லை. அம்மாவைத் தவிர அவர்கள் நான்கு பேரும் ஆஸ்பத்திரிக்குப் புறப்பட்டுப் போனார்கள். கொஞ்ச நாளைக்கு முன் இதே பாதையில் நடந்து போனது ஞாபகம் வந்தது. இனி எல்லாம் நினைவுகள் மட்டும் தானா?

ஆஸ்பத்திரியில் டெஸ்ட், ட்ரீட்மெண்ட் எல்லாம் முடிந்து அடுத்த மாதம் வந்து பார்த்துவிட்டுப் போகும்படி சொல்லி அனுப்பினார்கள்.

வீடு வந்து சேரும்வரை ஒருவரும் ஒரு வார்த்தை பேசவில்லை. அன்றைக்கு பூராவும் அந்த மௌனம் நீடித்தது. அத்தைதான் கலைத்தாள் மௌனத்தை. ''நாங்க நாளைக்கு கிளம்பறோம்.''

விஜி சாப்பிடும்போது அப்பாவிடம் சொன்னாள். ''அப்பா மணி இங்கேயே இருந்து ட்ரீட்மெண்ட் எடுத்துக்கட்டுமே?''

''அது எப்படிம்மா. அவன் காலேஜ் அட்டெண்ட் பண்ணணும். ஃபைனல்இயர். இங்க இருந்தா போரடிக்கும். நீயும் காலேஜ் போயிடுவே...'' — இது அப்பா.

''இன்னும் என்னப்பா காலேஜ்? நானும் படிப்புக்கு முழுக்குப் போட்டுட்டு மணியோட இருக்கேன்.''

''இல்லே விஜி அது எனக்குச் சரியாப் படலே எனக்காக நீ உன்னோட எதிர்காலத்தைப் பாழடிச்சுடக் கூடாது''—மணி.

''நீ இல்லாம எனக்கு ஏது எதிர்காலம்'' வாய்வரை வந்து விட்ட வார்த்தைகளைத் திருப்பி அனுப்பச் சிரமமாக இருந்தது.

**ம**ணி கிளம்பிப் போனபோது வருத்தமாக இருந்தது. போஸ்டலில் வேலைகிடைத்ததும் மறுவாரமே படிப்பை டிஸ்—கண்டின்யூ பண்ண வேண்டி வந்தது. காலேஜைவிட வேலையில் கவனமாக ஈடுபட முடிந்தது.

வாரத்திற்கு ஒருமுறை மணிக்குக் கடிதம் எழுதினாள்.

''நீ சம்பாதிப்பது அனைத்தையும் போஸ்டல் டிபார்ட்மெண்டிற்கே திரும்பக் கொடுத்து விடுவாய் போலிருக்கே'' என்று கிண்டலாக ஆனால் வாரந்தவறாமல் மணி பதிலெழுதுவான்.

அப்பா இதையெல்லாம் கவனித்துக் கொண்டே இருந்து விட்டு விஜிக்கு மாப்பிள்ளை பார்க்கும் படலத்தில் இறங்கினார். நல்ல பேங்க் மாப்பிள்ளையைப் பார்த்திருப்பதாகவும், அடுத்த புதனில் பெண் பார்க்க வருவதாகவும் அம்மா மூலம் சொல்லச் சொன்னார்.

விஜியின் மறுப்பை அவர்கள் எதிர்பார்த்திருந்தார்கள். ஆனால் அது இவ்வளவு அழுத்தமாக இருக்கும் என்று நினைக்கவில்லை. இனிமேல் தன்னால் வேறு ஒரு ஆணை நிமிர்ந்து பார்த்து ஏற்றுக்கொள்ள முடியாது என்று சொன்னாள்.

அப்பா கடையில் பணிந்து வந்தார். தான் பெண் பார்க்க வரும்படி வாக்களித்து விட்டதாக, எனவே பார்த்து விட்டுப்போகும் வரை பொறுமையைக் கடைப்பிடிக்கும்படியும் கேட்டுக்கொண்டார்.

விஜிக்கு இவர்களைப் பழிவாங்கத் தோன்றியது. சரியான சந்தர்ப்பம். காலம் பூராவும் மணியை மறக்க முடியாது அவர்களால்.

கல்யாணத்துக்குப் பூரணமாகச் சம்மதித்தாள். இவள் சம்மதம் கிடைத்த சந்தோஷத்தில் அவர்கள் மாப்பிள்ளையிடம் இருந்த குறைகளை மறந்து போனார்கள். அப்போதைக்கு ஆனால் இன்னும் கொஞ்சம் இளமையாய், அழகாய், விஜிக்கு ஏற்றவனாய்ப் பார்த்திருக்கலாமோ, அவசரப்பட்டு விட்டோமோ என்று பின்னால் அவர்களுக்கே தோன்றத்தான் செய்தது. ஆனால் விஜியைப் பொறுத்தமட்டில் எதிர்பார்ப்புகளும் இல்லை! ஏமாற்றங்களும் இல்லை.

அம்மா மட்டும் வாரந்தோறும் அவளை விசாரித்துக் கடிதம் எழுதி வந்தாள். இவள் பதில் எழுதினாலும் எழுதாவிட்டாலும் அங்கிருந்து கடிதம் வரும். எதிர்பாராத ஒரு தினத்தில் மணியிடமிருந்து ஒரு நீண்ட கடிதம் வந்தது.

அந்தக் கடிதத்தை பாஸ்கர் வந்ததும் காண்பித்தாள். படித்து முடித்துத் திரும்பத் தந்தான்.

"விஜி எனக்கு இந்த மாதிரி லெட்டர் எழுதற விவகாரமெல்லாம் பிடிக்காது" என்று கோபத்துடன் சொன்னான்.

அவனுள் கோபம் விசிறி விடப்பட்டது.

"ப்ளீஸ் டேக் இட் ஈஸி. அவர் தன்னோட கடைசிக் காலத்தில் இருக்கிறார். அவரோட ஒரே சந்தோஷம் என்னோட சந்தோஷங்களைத் தெரிஞ்சுக்கிறதுதான்.. அதனால் தப்பாப் பேசாதீங்கோ..."

"அப்படி அவன்மேல அக்கறை உள்ளவள்னா அவனையே கல்யாணம் பண்ணிண்டிருக்க வேண்டியதுதானே..."

அவள் பதில் சொல்லவில்லை. அவன் அவள் கையில் இருந்து கடிதத்தைப் பிடுங்க வந்தான். அவள் பின் பக்கமாகக் கொண்டு போனாள். முதல் தடவையாக அவள் கன்னத்தில் அறைந்தான். கடிதம் கைமாறிக் கிழிக்கப்பட்டது. அவன் கோபமாக ஒரு பார்வை பார்த்து விட்டு அந்த இடத்தை விட்டு வெளியேறினான்.

அந்த ஒரு நிகழ்ச்சியில் அவள் அவனை முழுமையாகப் புரிந்து கொண்டாள்.

ஒரு மாதம் கழித்து மறுபடியும் மணியிடமிருந்து கடிதம் வந்தது. அன்று பாஸ்கர் வீட்டிலிருந்தான். எதிர்பாராத விதமாக அது அவன் கையிலேயே கிடைத்தது. கிழித்தது.

"இன்னும் எத்தனை லெட்டரை என்கிட்டேயிருந்து மறைச்சிருக்கே"-- பதிலில்லை.

"ஒவ்வொரு லெட்டருக்கும் பதில் போடறே போல! இல்லாட்டா அங்கேயிருந்து வாரத்தவறாம கடிதம் வருமா? இந்த உறவுக்கு என்னடி பேரு? பேசாம அவன் கூடப் போயிடவேண்டியதுதானே?"



கர்நாடகா மாநிலம் மாண்டியா மாவட்டத்தில் உள்ள மட்டூர் தாசில்தார் கிருஷ்ணபிரசாத். மாநிலத்திலேயே சாதனை அளவாக 14 லட்சம் ரூபாய் வரி வசூல் செய்துள்ளார். முதலில் வரி செலுத்துவதன் அவசியத்தைக் கிராம மக்களுக்கு விளக்கி அவர்கள் ஒவ்வொருவரையும் பணம் செலுத்தும்போது உற்சாகப்படுத்துவதற்காக பான் பீடா வழங்கி மகிழ்விப்பாராம்!

தினமலர் – ஷோபா ஆனந்த்

அவன் கோபம், முரட்டுத்தனம் அவள் உடலைத்தான் தீண்டும்; காயப்படுத்தும். மனத்தை?

இன்று மதியம் வந்த அம்மாவின் கடிதம் மனத்தையும் காயப்படுத்திவிட்டது.

இது பாஸ்கரின் கையில் கிடைத்ததும் என்ன செய்வான்? தான் இதுவரை அவளைக் கொடுமைப்படுத்தியதற்கு வருந்துவானா? நிச்சயம் மாட்டான். அப்படியெல்லாம் மனிதாபிமானமாக அவனுக்கு நினைக்கத் தெரியாது. மணியின் முடிவு அவன் மனைவியின் காதலனின் மரணம். ஒரு சந்தேகத்தின் முற்றுப்புள்ளி, அவ்வளவே. ஒரு நிம்மதிப் பெருமூச்சுப் பிறக்கும்.

இந்தக் கடிதம் அவன் பார்வையில் படக் கூடாது. அவளை இந்தக் கடிதம் சந்தோஷப்பட வைக்கக் கூடாது.

இந்த முறை அவளே அந்தக் கடிதத்தைச் சுக்கு நூறாகக் கிழித்துக் காற்றில் பறக்க விட்டாள்.

முகத்தைத் துடைத்து, துக்கத்தை அழித்து, மனத்தைத் தேற்றி, அவன் வருகைக்காக வாசலில் வந்து நின்றாள். கொஞ்ச நேரத்தில் தடதடவென்ற சத்தத்துடன் அந்த மோட்டார் சைக்கிள் உள்ளே விரைந்தது. கிழிந்த காகிதத் துண்டுகள் சிதறி வெளியே பறந்தன.

## வாசகர் பங்கு

**டாக்டர் மாப்பிள்ளை**

முதன் முறையாகப் பெண் பார்க்கப்பட்ட போது பயத்தில் ஜுரமே வந்துவிட்டது. டாக்டர் மாப்பிள்ளை என்னைப் பார்த்ததும் பரிவுடன் விசாரித்து 'பிரிஸ்கிரிப்ஷன்' எழுதிக் கொடுத்தார்! புதுமையான பெண் பார்க்கும் படலம்தான்.

**ஆர். ஜானகி, புதுக்கோட்டை—1.**

**புரட்சித் திருமணம்**

பெண்ணிடம் தனியாகப் பேச வேண்டும் என்றேன். சம்மதித்தனர். தனியறையில் அவளைச் சந்தித்த போது கண்ணீரும், கம்பலையுமாய்த் தான் வேற்று சாதிக்காரரை விரும்புவதாகவும் தன் தங்கையின் எதிர் காலம் கருதியே காதலுக்குப் பெற்றோர் தடை விதித்துள்ளதாகவும் கூறினாள்பெண். தங்கையை மணக்க நான் முன் வந்து காதலர்களையும் இணைத்து வைத்தேன்.

**பி. முரளி கீழப்பூங்குடி.**






**எஸ் சார்! எஸ் சார்!**

மகளிர் கல்லூரி ஒன்றின் என். ஸி. ஸி. பயிற்சியாளரான நான் ஒரு சனிக்கிழமை பயிற்சிக்குக் காப்டன் வராத எரிச்சலுடன் பெண் பார்க்கப் போனேன். போன இடத் தில் தலைகுனிந்து வந்த பெண் என்னை நிமிர்ந்து பார்த்ததும் அடே....என்னில் நின்று சல்யூட் செய்தாள். ஆமாம், பயிற் சிக்கு வராத காப்டனேதான் மணப்பெண். பிறகு என்ன, வாழ்நாள் முழுவதும் எஸ் சார், எஸ் சார்தான்!

**கே. பிரகாஷ், சேலம்-5**

**ஆருத ரணம்**

நான் பாடிய ஸிம்மேந்திர மத்தியமமும், வீணையில் வாசித்த கல்யாணியும் பயனற்ற முயற்சியாகிப் போக வந்தவரின் கலை ரசனை யற்ற பண்பற்ற பேச்சும், அகம்பாவமும்... இனிமையாய் இருந்திருக்க வேண்டிய ஒரு நிகழ்ச்சியை என் வாழ்வில் அழியாத வடு வாய் ஆக்கிவிட்டது.

**ஜி. எஸ். கற்பகம், சென்னை-86**

**தடுத்தாட்கொண்டவர்**

முன் பின் தெரியாதவர் காலில் விழ வேண்டுமே என்ற தயக்கம் இருந்தாலும் பெரியோர் மனத் திருப்திக்காக வந்த, மாப் பிள்ளையை வணங்கப் போனேன். அவர் அப்போதே என்னைத் தடுத்தாட்கொண் டார் — நமஸ்காரம் என்னும் 'Formality' தேவையில்லை என்று கூறி.

**கோமதி, திருச்சி—5.**

**பரீட்சைக்குத் தயார்**

பெண்ணைப் பிடித்து விட்டது. அவளை இண்டர்வியூ செய்ய அனுமதி வாங்கினேன். கேள்வி கேட்கும் முன்னரே பதில்'டக், டக்' கென்று வெளிவந்தது. பிறகு தான் தெரிந்தது இந்தப் பரீட்சைக்கு நாத்தனார்க் காரி (என் அக்கா) பெண்ணை ஏற்கெனவே தயார்ப் படுத்தியிருந்தாள் என்று.

**வி. கோபாலகிருஷ்ணன் கோவை—9.**

**சபலபுத்தி விளைத்த வினை**

என் தோழியைப் பெண் பார்க்க வந்தவர் உடனிருந்த என்னை மணக்க விரும்புவதாக வெளிப்படையாகக் கூறிய போது.... என் கண்களுக்கு மட்டும் சக்தி இருந்திருந் தால்... அந்த நபரைப் பார்வையால்




# பெண் பார்த்த போது

கூந்தல் நிழலா நிஜமா?

மீசை நிஜமா பென்சிலா?

பொசுக்கிவிருப்பேன். எங்கள் நட்பில் விரிசல் இல்லையென்றாலும் தோழியின் பெற்றோர் என்னை ஒதுக்கவே செய்கிறார்கள்.
சந்திரா, சென்னை—32.

## இனிய அனுபவம்

முன்னறிவிப்பு இன்றிப் பெண் வீட்டில் போய்க் கதவைத் தட்டினோம். கல்யாணப் பெண்ணே கதவைத் திறந்து, "யாரைப் பார்க்கணும்?" என்ற போது "உங்களைத் தான் பார்க்கணும்" என்று நான் கூற... ஒரு கணத்தில் விஷயத்தைப் புரிந்து கொண்ட அவள் நாணி முகம் சிவந்து உள்ளே ஓட.... இன்று நினைத்தாலும் தேன் போலத்தான் இருக்கு.
டி. தேவராஜ், ஏரல்.

## நிழலா? நிஜமா?

படபடப்பைச் சமாளித்துக் கொண்டு, திரம்பி வழிந்த ஹாலில் எல்லோருக்குமாய் ஒரு நமஸ்காரம் செய்து விட்டு நிமிர்ந்ததும் 'கூந்தல் நிழலா? நிஜமா?' என்று மாப் பிள்ளை அடுக்காய்க் கேட்டார். நான் சற்றும் சளைக்காமல் 'மீசை அசலா? பென்சிலா?' என்று கேட்டதும் எழுந்த சிரிப்பலைகளின் நடுவே எங்கள் கல்யாணமும் நிச்சயமாயிற்று.
சாந்தி ராஜா, ஜோட்பூர்—1.

## பல்லைக் காட்டு!

என்னை முதலில் பெண் பார்க்க வந்தவர் மாப்பிள்ளையின் தாத்தா! அவர் சொன்னதை யெல்லாம் செய்து காட்டுவதற்குள்.... அப்பப்பா, ஊசியில் நூல் கோத்து, புத்தகம் படித்து, நடந்து காட்டி, பல் வரிசையைக் காட்டி.... என்று இந்த ரீதியில் பல. இப்போது நினைத்தால் சிரிப்புத்தான் வருகிறது. அப்போதோ சொல்ல முடியாத பயம்!
சியாமளா கிருஷ்ணன், பம்பாய்—80.

## இது சத்தியம்

மாப்பிள்ளை என்னைவிட மூன்றுமடங்கு பெரியவர் — சரீரத்தில், நான் மாட்டேன் என்று கூறிவிட்டேன். பின்னர் என்னைத்தனி யாகச் சந்தித்து மூன்றே மாதங்களில் பாதியாக இளைத்து விடுவதாய் வாக்குக் கொடுத்தார். அதைக் காப்பாற்றி என் கைப்பிடித்தார்!
எஸ். ராஜீவி, சென்னை—83.

## பிள்ளைப் பருவத்திலே

அப்போது எனக்குப் பத்து வயது. விளையாடிக் கொண்டிருந்தவளை இழுத்து வந்து என் அத்தை ஒரு புடவையைச் சுற்றிவிட்டு அலங்காரம் செய்தார். அன்று புதிய முகங்களைப் பார்த்துத் திருதிருவென்று விழித்ததை நினைத்தால் இப்போது சிரிப்புத்தான் வருகிறது. அந்த முதல் முறையே கடைசியாகவும் அமைந்ததைக் குறிப்பிடவேண்டும்.
தாயம்மாள், குளித்தலை.

## சவாலை சமாளித்தேன்

தோழியின் திருமணம், மாலை அரட்டைக் கச்சேரியில் பெண் பார்க்கும் வைபவத்தின் அவலங்களை விளாசிக் கொண்டிருந்தேன். "இவ்வளவு பேசும் நீங்கள் யார் காலிலும் விழாமல் கல்யாணம் செய்து கொண்டு காண்பியுங்களேன்" — எனக்குச் சவால்




விட்டவர் மணப்பெண்ணின் சகோதரர். அப்போது தான் அவரைப் பார்த்தேன். சவாலே ஏற்றேன்! அது அடுத்த ஆறுவது மாதம் எங்கள் திருமணத்தில் முடிந்தது!

ரேவதி சேது, நெய்வேலி.

## புல்வாணமான லஸ்பென்ஸ்

என்னைப் பெண் பார்க்க டாக்ஸியில் வந்தார்கள். இரண்டு வாரங்களுக்கு பதில் கூறவில்லை. பிறகு நிச்சயதார்த்தத்தின் போது தாமதத்துக்கு மன்னிப்புக் கேட்டார்கள். அப்போதுதான் அப்பா குட்டை உடைத்தார். ''நீங்கள் வந்து போன அன்றைக்கே உங்கள் முடிவு தெரிந்து விட்டது. டாக்ஸி டிரைவர் எங்கள் குடும்ப நண்பர் தான்.''

லதா, கும்பகோணம்.

## மனமிரங்கிய மாப்பிள்ளை

நடுங்கும் கைகள். காப்பி டம்ளர்கள் டபராக்களில் டான்ஸ் ஆடின. முதுகெல்லாம் வியர்வையால் நனைந்து விட்டது. மனமிரங்கினார் மாப்பிள்ளை. கம்பீரமாய் எழுந்து வந்து தாமே என் கையிலிருந்து காப்பி டிரேயை வாங்கி எல்லோருக்கும் விநியோகித்தார். சம்மதத்தைத் தெரிவிக்க இதைக் காட்டிலும் சிறந்த வழி இருந்திருக்க முடியாது.

லட்சுமி கிருஷ்ணசாமி, பொள்ளாச்சி.

## பாச்சா பலிக்காது

பதினேந்தாவது வயதில் துனிக் கூட பிடிக்காமல் பெண் பார்க்கப் பட்டேன். ஆத்திரத்தை வெளிப்படையாகக் காண்பித்தால் கல்யாணம் நடக்காது என்ற எண்ணத்துடன் மாப்பிள்ளையைப் பார்த்து ஒருமுறை முறைத்தேன். அவரோ சிரித்துக் கொண்டே சம்மதம் கூறி என்னை மணந்து கொண்டார்

ஆர். வி. கமலா, சென்னை–52.

## விட்ட குறை வந்து தொட்டதடி

'பாடு' என்றதுமே பளிச் சென்று பாட ஆரம்பித்து விட்டேன். பிறகு பயத்தில் பாதியில் பாட்டு மறந்து விட்டது. இதை யாரும் பொருட்படுத்தாமல் இயல்பாகப் பேச ஆரம்பித்தனர். பின்னர் திடீரென்று வார்த்தைகள் ஞாபகம் வர, இரும்பவும் விட்ட இடத்தில் இருந்து பாடினேன். எல்லோரும் சிரித்தனர். என்னவரைத் தவிர. என் கபடமற்ற குணத்தை வியந்து திருமணத்துக்கு ஒப்புக் கொண்டார்.

சியாமளா லக்ஷ்மணன், சென்னை–90.

## இருமுறை தலைகுனிவு

''பெண் போட்டோவில் பார்த்தது போல் இல்லையே...'' என்று மாப்பிள்ளை இழுக்கவும் நான் கூனிக் குறுகிப் போனேன். ''...அதைவிட நேரில் பல மடங்கு அழகாய் அல்லவா இருக்கிறாள்'' என்று முடித்ததும் வெட்கத்தால் மீண்டும் தலை குனிந்தேன்.

லதா தியாகராஜன், திருச்சி–16.

## நோ ஸ்டாக்

அப்பா, அம்மா இல்லாத எனக்கு அண்ணா தான் கல்யாண ஏற்பாடு செய்தார். பெண் பார்க்கும் போது பாடினேன். பிள்ளை வீட்டார் மற்றொரு பாட்டுப்பாடச் சொன்னதும் அண்ணன் பதறி விட்டார். ''இந்த வைபவத்துக்காக இரண்டே இரண்டு பாட்டுத் தான் கற்றுக் கொண்டிருக்கிறாள். இன்னும் ஒன்றுதான் ஸ்டாக்கில் உள்ளது'' என்றதும் எல்லோரும் சிரித்து விட்டனர்.

சியாமளா ஹரிஹரன், கோவை–9.

## புதுமையான அறிமுகம்

''யாரோ இவர் யாரோ'' பாடி முடிந்ததும் மாப்பிள்ளை எழுந்து நின்று ''என் பெயர் ராமநாதன், சொந்த ஊர், தஞ்சாவூர்'' என்றாரே பார்க்கலாம். அடுத்த முகூர்த்தத்தில் அந்தத் தஞ்சாவூர் ராமநாதனைக் கைப்பிடித்தேன்.

ஆர். ராஜேஸ்வரி திருவாரூர்.

ராகமாலிகாவழங்கும் பட்டுப்புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:

சந்திரா
டி-22, எஸ். ஐ. பி. காலனி,
நந்தம்பாக்கம், கிண்டி, சென்னை-32.










உடலோடு இணைந்து உள்ளம் கவர்ந்து
எழில் நிறைந்து... ஈடிணையற்றது...

**டான்டெக்ஸ்®**

TTK தயாரிப்பு

## அத்தியாயம் 18

### தலைவனின் காதலி

**கா**ட்டில் காயும் அந்த நிலவு...
காய்ந்தென்ன? மாய்ந்தென்ன?

அறிவைப் போர்வையாக்கிக் கொண்ட சில அற்பங்களைப் போல, மங்கிய நட்சத்திரங்கள் மலட்டுத்தனமாக விமர்சித்துக் கொண்டிருக்கும் அந்த வேளையில்...

மரங்களுக்குள் பதுங்கிய மலட்டுஇருட்டைக் கிழித்துக் கொண்டு வேங்கைரதம் வேகமாகச் சீறிப் பாய்ந்து கொண்டிருந்தது.

அதுகுறித்து ஆலோசித்துக் கொண்டிருந்தான். அவனது கண்கள் அடிக்கடி திருமேனியின் சௌந்தரிய முகத்தை மொய்த்துக் கொண்டிருந்தன.

ரதத்தைப் பேயாக விரட்டி ஓட்டி வருபவன் பசுபதி. அவனது ரதமோட்டும் சாமர்த்தியத்தைக் கண்டு மெச்சிக்கொண்டிருந்தான் வேங்கைமார்பன். முன்னும் பின்னுமாக சில வீரர்கள், குதிரைகளின் சாபத்தைக் கொட்டிக் கொண்டு விரட்டுகிறார்கள்.

தியாகவல்லிக்குக் கண்கள் செருகுகின்றன. இதயத்தை அச்சம் அரித்துத் தின்கிறது.




அதன் கடகடத்த பெருத்த ஓசை கேட்டு வனாந்திரத்தில் வாழும் கொடிய ஜீவன்களும், புதர்களும் மரங்களுமே தஞ்சமென்று வாழும் சிறுகு ஜீவன்களும் அலறியடித்துக் கொண்டு அங்குமிங்கும் பாய்ந்தும் பறந்தும் அலைமோதின.

காற்று 'சோ'வென்று இரைகிறது.

பாண்டிய இளவரசி திருமேனி, மயங்கிய நிலையில் தியாகவல்லியின் மடியில் சாய்ந்து கிடந்தாள். எதிரே வேங்கைமார்பன் அமர்ந்து எதிர்ப்படப்போகும் உற்பாதங்கள் என்ன என்பதைப் பூரணமாக உணர்ந்து

மதுரையை எண்ணிப் பார்க்கிறாள்: மாமன்னரை நினைத்துப் பார்க்கிறாள்; கடத்திய இடமான பொற்றாமரைக் குளத்தை ஞாபகப்படுத்திப் பார்க்கிறாள்.

தான் செய்தது துரோகமா?

இல்லவே இல்லை; வேங்கைமார்பனையும் திருமேனியையும் ஒன்று சேர்த்து அரியணையில் அமர்த்திப் பார்க்க வேண்டும் என்கிற தியாகம் நிறைந்த மகோன்னத ஆசைக்கு மாசு கற்பிக்க முடியுமா?

# வேங்கைமார்பன்

பாண்டிய நாட்டுக்கு இது துரோகமாகலாம்; பாசத்துக்குரிய அத்தானுக்கு —மறுபிறவிக்குரிய மணாளனுக்கு இது துஜஸ்தம்பமல்லவா? எப்படிப் பார்த்தாலும் அவள் கயற்கொடிக்குக் கண்ணி வைக்கவில்லை. காதலுக்குச் சுதந்திர வேள்வி நடத்துகிறாள்.

திருமேனியைக் கவனிக்கிறாள்.

நன்றாகவே மயக்கமுற்றிருக்கிறான்.

மூளைமுடக்கி என்னும் அக்கால உபயோகத்திலிருந்த ஒருவித சின்னஞ்சிறு கொடிப் படரின், நகமொத்த இலைகளைப் பறித்து வந்து, சாறு பிழிந்து, எலுமிச்சம்பழத்தை இரண்டாகப் பிளந்து, பிளந்த பகுதியில் சாற்றைத் தடவி, மீண்டும் ஒன்றாக ஒட்ட வைத்து, ஒரு நாழிகைப் போதுக்குப்பிறகு அதனை எடுத்துப் பிரித்து, மூக்கில் வைத்த முப்பது கணங்களில் எவரும் மயக்கமுறுவர். அதன் முகர்வு அழுத்தத்தைப்பொறுத்து மயக்கத்தின் நாழிகைகள் நீடிக்கும்.

திருமேனி எப்படிப் பார்த்தாலும்பொழுது விடிந்தே விழிப்பான்.

... மதுரை அரண்மனை இந்நேரம் செய்தியறிந்து பெருத்த களே



பரத்தில் இறக்கை கட்டிப் பறந்து கொண்டிருக்கும். ஆனால் என்ன நடந்தது என்பதை எந்த வழியிலும் கண்டறிய நியாயமில்லை.

இருக்கும் எதிரி வேங்கைமார்பன் என்கிற ஐயம் முகிழ்க்குமேயானால், வீரர்கள் கானப்பேர் பாதையைக் கணத்துக்குள் சாவதமாக அளந்து பார்க்கப் பறந்து கொண்டிருப்பர். இதையறிந்து தானே சுற்று வழியானாலும் சோணாட்டு எல்லையோரப் பகுதிக்குள் புகுந்து மீண்டும் தென்மேற்கே செல்லும் பயங்கர வனாந்திரத்துள் நுழைந்தது.

பாதையா அது. கரடுமுரடான பாதை? சமத்காரனை பசுபதி விரட்டோ விரட்டென்று புரவிகளை விரட்டியதுமல்லாமல், சேணங்களைப் பிடித்துச் செலுத்தும் லாகவத்துக்காகவே அவனுக்குப் பரிசளை வழங்கலாம்!

எந்த நேரமும் தடம் புரண்டு விடலாம் போன்ற பதைபதைப்பு...

தியாகவல்லி நெஞ்சைக் கையில் பிடித்துக் கொண்டு பயணப்பட்டுக் கொண்டிருக்கிறாள்.

வெண்ணாற்றைக் கடந்ததும் வேங்கைமார்பனுக்கு ஒரு நிம்மதி பிறந்தது. இனி யாரும் ஒன்றும் செய்து விட முடியாது. கானப்பேருக்கு இது வழியே அல்லவென்றாலும், வேறு வழிகள் வேதனைக்குரியவை. நேரம் அதிகமானாலும் நெஞ்சில் பயமின்றி கானப்பேரைக் கண்டு விடலாமே?

அடிக்கிற காற்றின் வேகமும், கிழித்துச் செல்லும் ரதத்தின் ஓசையும், தூக்கித் தூக்கிப் போடும் அவத்தையால் பிருஷ்ட பாகத்தின் வேதனையும் எங்கே பேசிக் கொண்டு வர முடியும்? பேசினாலும் தான் கேட்குமா?

''கொஞ்சம் எங்கேனும் தங்கி இளைப்பாறலாமா?'' என்று சமிக்ஞையால் 'கேட்கிறாள் தியாகவல்லி.

வேங்கைமார்பன் வேண்டாம் என்பது போலத் தலையசைத்து மறுத்துவிட்டான்.

இமைகளை நித்திரை இறுக்க, வேங்கைமார்பனும் 'தூங்கு' என்பது போல இமைகளின் மூலம் உத்தரவு பணிக்க, தியாகவல்லியின் இமைகள் தியானத்தில் ஆழ்ந்தவை போல நித்திரையில் சற்றே நிம்மதி தேடியது.

ரதமோ...

கானப்பேரையில் எல்லை நோக்கிக்

காற்றெனச் சீறிப் பாய்ந்து கொண்டிருந்தது.

இதே நேரத்தில்—

வேங்கைவனத்து ஜாதகத்துக்குரிய இருகங்கள் எப்படி வேடிக்கை பார்ப்பது, எவ்வாறு எங்கே அமருவது என்று புரியாமல், நீச்சபங்கம் செய்து ராஜயோகம் தாராது, காளிங்கனுக்கு மோட்சபங்கம் தரலாமா விமோசன பங்கம் தரலாமா? என்று வியாழ பகவான் யோசித்து ஒன்பதாம் இடத்தைத் தேர்ந்தெடுக்குமுன்னர், சனிப்பார்வையே போன்று குறுகுறுத்து நோக்கிய குறுமலைக்கிழார், அஷ்டமத்தில் அமருவது போல ஆசனத்தில் அமர்ந்து, காளிங்கனையும் இளங்கோவேளானையும் அமரச் செய்தார்.

''தம்பி யார்?'' என்று கேட்டார் அமைச்சர்.

காளிங்கனும், ''பாண்டியப் பேரரசின் புரவிப் படைத் தளபதி இளங்கோவேளான்'' என்றான்.

''ஓகோ!''—கண்கள் இளங்கோவைக் கணிக்கின்றன.

''காளிங்கா! மன்னரை நீ அவசரமாகப் பார்க்க வேண்டுமா?''

மேலே வந்த ஒற்றர்கள் மூலம் அனைத்தையும் அறிந்து கொண்டும், எதையோ ஒன்றை மனத்தில் திட்டிப் பார்த்து, சாணக்கியத்தின் நகலை விரித்துப் பார்த்தார், குறுமலைக்கிழார்.

காளிங்கன் கண்களில் அவரது கண்கள் ஆழப் பதிகின்றன.

இடிபோன்ற வேங்கைகளின் உறுமல்களைக் காற்று சுமந்து கொண்டு வருகிறது.

''பயப்படாதே இளங்கோவேள் அது தான் வேங்கைமார்பன் குரல்!'' என்றார் குறுமலைக்கிழார். வேங்கைகளின் உறுமலையே அவர் இவ்வாறு அறிமுகம் செய்தார்.

காளிங்கனும் புரிந்து கொள்ளவே முடியவில்லை.

'மன்னரை அவசரமாகப் பார்க்க வேண்டுமா?' — என்ன கேள்வி இது? நான்கு செவிகளை நடுக்குறச் செய்கின்றன.

ஒற்றன் கூறியது மன்னர் மதுரையிலிருப்பதாக அல்லவா? நாமும் அவர் அனுப்பியதாகத்தானே பொய்யுரைத்திருக்கிறோம்...?

இது என்ன இப்படி ஒரு புதுக்கேள்வி? அறத்துன்பமான நிலை...

எடை போட்டுச் சோதனை நிகழ்த்துகிறாரா அமைச்சர்?

தனது துரோகக் சுயரூபம் இவர் வரை விஸ்வரூபம் கண்டு, அது பல்பரூபமாக இப்படியான நெருப்பு ஜுவாலையான கேள்வி எழுந்து பயமுறுத்துகிறதா?

வருவது வரட்டும்; இறங்கியாகி விட்டது. இனி இடைப்பு போனால் என்ன? தலையே போனால் என்ன? ஒற்றன் கூறியதைப் பின்பற்றியே பனிச்சென்று மறுமொழி கூறினான் காளிங்கன்:

''மன்னரைப் பார்க்க வேண்டுமாவது? அவர் மதுரையிலல்லவா இருக்கிறார்! அவர் தானே இங்கு என்னை அனுப்பி இருக்கிறார். இவ்வாறு இருக்க நான் எப்படி அமைச்சரே அவரை இங்கு தரிசிக்க முடியும்? சோதிப்பதற்கு நானா கிடைத்தேன்? அல்லது இதுவா நேரம்?''

துணிவோ துணிவு; மகா துணிவு!

அமைச்சருடைய கண்களில் பிரகாசம் தெரிகிறது.

தப்பினோம் என்று காளிங்கன் தைரியம் அடைகிறான். சற்றே மறந்து அமைச்சரைப் பின்பற்றி, ''ஆம், அவசரமாக மன்னரைப் பார்க்க வேண்டும்'' என்று சொல்லி இருந்தால்...

அப்படியே சொல்லி இருந்தாலும் தப்பிக்க மார்க்கமில்லாமலில்லை. ராஜதந்திரத்துக்குத் தான் ரகசிய வழிகள் ஆயிரம் இருக்கின்றனவே...

ஆனாலும் ஒற்றனிடம் சொன்ன வார்த்தைகள்?

அதற்கும் வழியுண்டு; ஆயினும் பழி கண்டு விழி பிதுங்குமேயானால்...

வாளின் மீது கழுத்தை வைத்து விளையாடப் போய் வாளும் மிஞ்சியது; கழுத்தும் தப்பியது என்று மகிழ்ச்சியுற்றான்.

சொல்லப் போனால் காளிங்கனுடைய சுயரூபம் இன்னமும் வேங்கைவனத்தில் விஸ்வரூபம் கொள்ளாதிருந்தது அவனது அதிர்ஷ்டமே! இவ்விதமான ஒரு சம்பவம் ஏற்படும் என்பது வேங்கைமார்பன் எண்ணிப் பாராதது. அருமைக்கும் அன்புக்கும் பாத்திரமான தியாகவல்லியின் தியாகச் சிந்தனைய முன்னிட்டு அதுவரையிலும் காளிங்கனை மன்னித்து வந்திருந்தான் வேங்கைமார்பன்.

நெஞ்சில் அவனைச் சிறை வைத்திருந்தாலேயொழிய, சிறைக் கோட்டத்தில் அவனுக்கு அறை ஒதுக்கிப் பார்த்தானில்லை. அதுவே இப்போது ஆதாயத்தைத் தேடி விட்டது. ஏதோ அமைச்சர் ஒரு மதியூகத்தை முன்னிட்டுச் சோதிக்கப் போய், துணிச்சல், காளிங்கனுக்குத் துணை நின்று விட்டது.

பொருள் ஆர்ந்த புன்முறுவலுடன், ''காளிங்கா! நமது மன்னர் மதுரைக்கு வந்திருக்கும் செய்தி, நிஜமாகவே உனக்குத் தெரிந்திருக்கிறதா என்று சோதிக்கவே இவ்வாறு கேட்க நேர்ந்தது. இப்போது மன்னர் எங்கு தங்கி இருக்கிறார்?'' என்றார்.

காளிங்கன் சொன்னான்:

''சிறையில்!''

பனிச்சென்று காளிங்கன் சொன்ன மறுமொழி கேட்டுப் பதறித் துடித்து எழுந்து கொண்டார் அமைச்சர் குறுமலைக்கிழார். தொடர்ந்து இருவருமே எழுந்து கொண்டனர்.

வேங்கைகளின் உறுமல்கள் இப்போது அளவுக்கு மீறிக் கேட்கின்றன.

இரவில் பயங்கரம் இளங்கோவேளானை ஏதேதோ நினைக்கத் தூண்டுகிறது. காளிங்கன் அக்கினியைச் சூழ்ச்சியாக்கி அதன் நடுவில் காளிங்க நர்த்தனம் புரிகிறான்.

உடல் பதற, உள்ளம் பதற எழுந்து நின்ற அமைச்சர், ''சிறையிலா? என்ன காளிங்கா இதனை இவ்வளவு அமைதியாகக்

விசேஷ பரிசுகளுடன்

# டெபாசிட் சேகரிப்பு விழா!

(15-7-84 முதல் 31-10-84 வரை
வாடிக்கையாளர்களின் வேண்டுகோளுக்கிணங்க நீடிக்கப்படுகிறது)

**22%** வட்டி வழங்கப்படுவதுடன்
**V.I.P. BRIEF CASE**
அன்பளிப்பும் வழங்கப்படும்.

மற்றும் மேற்படி காலத்தில் டெபாசிட் செய்பவர்கள் ஒவ்வொருவரும் விசேஷ பரிசு போட்டியில் கலந்துகொள்ளும் வாய்ப்பை பெறுவார்கள். சென்னை கிளையில் டெபாசிட்தாரர்கள் முன்னிலையில் நடைபெறும் பரிசு போட்டியில் வெற்றி பெறுபவர்களுக்கு

| முதல் பரிசு | இரண்டாவது பரிசு | மூன்றாவது பரிசு | நான்காவது பரிசு |
|---|---|---|---|
| **கலர் TV** (அல்லது ரூ. 10,000/- ரொக்கம்)  | **குளிர் சாதனப் பெட்டி** (அல்லது ரூ. 5000/- ரொக்கம்)  | **வாஷிங் மெஷின்** (அல்லது ரூ. 4000/- ரொக்கம்)  | **பிளாக் & ஒயிட் TV** (அல்லது ரூ. 3000/- ரொக்கம்)  |

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

| | |
|---|---|
| சென்னை | : 91, உஸ்மான் ரோடு (சிவா-விஷ்ணு கோவில் அருகில்) தி. நகர், சென்னை-600 017 போன் : 447186 — 442218 |
| பெங்களூர் | : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971 |
| திருச்சி | : 22, மதுரை ரோடு (முதல் மாடி) திருச்சிராப்பள்ளி-620 008 |
| பாண்டிச்சேரி | : 11, செரு தெரு (கனரா வங்கி எதிரில்) பாண்டிச்சேரி-605 001 |
| தஞ்சாவூர் | : எண் : 2 & 3, முதல் மாடி, ஜி. ஏ. கனால் ரோடு, தஞ்சாவூர்-613 001. போன் : 1626 |
| திருவண்ணாமலை | : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன் : 463 |
| பட்டுக்கோட்டை | : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை-614 601 போன் : 453 |

டெபாசிட்தாரர்களை அறிமுகம் செய்பவர்களுக்கும் அன்பளிப்பு வழங்கப்படும்.

CHARI

கூறுகிறாய்?'' என்றார். பேச்சிலும் மூச்சிலும் நெருப்பு சுவாசம்.

''நீங்கள் என்னை அமைதியாகச் சோதிக்கத் தொடங்கினீர்களேயொழிய அவசரமாக, என்ன விஷயம் மன்னர் என்ன சொல்லி யனுப்பினார்' என்று கேட்கவில்லையே எதற்காக இந்த இரவில் வந்து உங்களை அவசரமாகச் சந்திக்க வேண்டும்?''

அதுவும் நியாயமே என்பது போலத் தலையசைத்துக் கொள்கிறார் குறுமலைக் கிழார். அவர் எந்த உண்மையை எப்படி அலசுவார்!

''மன்னர் எவ்வாறு பிடிபட்டார் காளிங்கா?'' என்றார் குறுமலைக்கிழார்.

''தியாகவல்லியைச் சந்திக்க எங்களுக்கென ஒதுக்கப்பட்ட வீட்டுக்கு வந்திருக்கிறார். அந்த நேரத்தில் அங்கே பாண்டிய இளவரசி இருக்கவே எதிரும் புதிருமாகச் சந்திக்க நேர்ந்து விட்டது. இளவரசியும், சிலைக்கு மாலையிட்ட வஞ்சம் தீர எதையோ பேசிவிட, இவர் தப்பிக்க வழிதேடாமல் தர்க்கத்துக்கு வழி தேடி விட்டார். இதற்குள் அரண்மனை வீரர்கள் முற்றுகை யிடப் பிடிபட நேர்ந்து விட்டது.''

''பிறகு?''

''மன்னரை அரண்மனையிலேயே கௌரவமாகச் சிறை வைத்து, என்னையும் இளங்கோ வேளானையும் நிபந்தனையுடன் இங்கே அனுப்பி இருக்கிறார் பாண்டியமாமன்னர்.''

''என்ன நிபந்தனை?''

''இங்கே இருக்கும் பாண்டிய இளவரசி யாரின் சிலையைப் பெயர்த்து இளங்கோ வேளானிடம் ஒப்படைக்க வேண்டுமாம். அது மாபெரும் அவமானமாக இருக்கிறதாம். சிலையை அனுப்பினால் மன்னரை விடுதலை செய்து மரியாதையுடன் அனுப்பி வைக்கலாம்...''

''மறுத்தால்?''

''மன்னனுடைய தலையும் எனது தலையும் மக்கள் வேடிக்கை பார்க்க வேங்கைவனம் நோக்கி வருமாம்.''

''அடுத்து என்ன நிகழும் என்று பாண்டிய மன்னர் யோசித்தாரா?''

''தலைவனில்லாத கோட்டை கணவனில்லாத மனைவி மாதிரி! தரைமட்டமாக்க எந்நேரம் பிடிக்கும் என்று சூள்கொட்டு கிறார்!''

குறுமலைக்கிழாரால் ஒன்றும் பேச முடியவில்லை. பதறிய வண்ணம் பின்னங்கைகளைக் கட்டிக் கொண்டு உலவுகிறார்.

எங்கோ விடிசேவல் குரல் கொடுக்கிறது.

''அமைச்சர் பெருமானே விடிவதற்குள் புறப்பட வேண்டும். விளக்கு வைக்கிற போது பாண்டிய இளவரசியாரின் சிலை மதுரையில் இருக்க வேண்டும் என்பது பாண்டியரின் உக்கிரமான நிபந்தனை!''

நெட்ட நெடிய பெருமூச்சு.

சொன்னவன் காளிங்கன்: நம்பாமல் இருப்பது நியாயமற்றது என்றெண்ணி நடந்தார் அமைச்சர் குறுமலைக்கிழார்.

வேங்கை வனத்தை அடைந்து கவனித்த போது மேலும் வியப்புற்றான் இளங்கோ வேளான்.... எத்துணை அற்புதமாகப் பொன்னால் சொரூபம் சமைத்திருக்கிறான் வேங்கை மார்பன்!




அதிருப்தியுள்ள மனைவியை வைத்துப் பல நாவல்கள் எழுதி விடலாம். திருப்தியுள்ள மனைவியை வைத்து ஒரு சிறுகதை கூட எழுத முடியாது!

—ஓர் அறிஞர்.

எஸ். ஸ்ரீதர்.

வேங்கைகளை அறையினுள் அடைக்க முயல்கிறார்கள் அவற்றுடன் பழகிய வீரர்கள்.

'ஆ! இந்த வேங்கைகளுடன் வேங்கை மார்பன் விளையாடி வருகிறான்! வீரத் திருமகன்தான் வேங்கைமார்பன்' என்றும் மனத்துள் பாராட்டிக் கொள்கிறான் இளங்கோவேளான்.

''சிலையை உனது ஆட்களே பெயர்த்தெடுக்கலாம் இளங்கோவேள் எங்கள் ஆட்களை விரலை வெட்டுவேன் என்று பயமுறுத்தினாலும் சிலையைத் தொடவும் மறுப்பார். அத்துணை ராஜவிசுவாசிகள்! ம்ம்! விரைந்து முடியுங்கள்! முடிந்ததும் எனக்குச் செய்தி சொல்லியனுப்புங்கள். நான் வந்து வழி அனுப்பி வைக்கிறேன்.''

அமைச்சர் தமது மாளிகை நோக்கிச் சென்று விட்டார்.

பாண்டிய நாட்டிலிருந்து வந்த பத்து வீரர்களும் திருமேனிச் சிலையைப் பெயர்க்க முயல்கிறார்கள். காளிங்கனும் இளங்கோ வேளானும் அவசரத்தை முன்னிட்டுத் துணைபுரிகிறார்கள்.

அறையில் அடைபட்ட வேங்கைகள், ஏதோ தங்கள் தலைவனின் காதலிக்குத் தீங்கு நடக்கிறது என்பது போல அறைக்கம்பிகளில் அறைந்து அறைந்து உறுமுகின்றன.

திருமேனிச்சிலை ஒருவாறு பெயர்த்துநகர்ந்த போது...

கோட்டை முரசம் முழங்கும் சப்தம் கேட்கிறது.

அது காளிங்கனுக்குப் புரிகிறது.

அந்த முரசம், வெளியில் சென்ற மன்னன் கோட்டையை அடைந்து விட்டான் என்று எச்சரிக்கவே சத்தம் எழுப்புகிறது.

இதுகுறித்துக் காளிங்கன் இளங்கோ வேளானிடம் சொல்ல...

இடிவிழுந்தது போலானான் இளங்கோ வேளான்.

வேங்கைகளுக்கும் அது புரிந்துவிட்டதோ என்னவோ, உறுமல்கள் பயங்கரமாகப் பீறிட்டு எழுந்தன.

(தொடரும்)

அமுதசுரபி

குறுநாவல் போட்டி

**பரிசு ரூ. 5000 5 பரிசுகள்**

எழுத்தாளர்களை ஊக்குவிக்கவும்,
புதிய நல்ல எழுத்தாளர்களை அறிமுகப்படுத்தவும்,
இந்த ஆண்டு "குறுநாவல்" போட்டியை
அறிவிப்பதில் மகிழ்ச்சியடைகிறோம்.

**ரூ. 5000 பரிசு**

ஒவ்வொரு குறுநாவலுக்கும் ரூ. 1,000-ம் விதம்
5 குறுநாவல்களுக்கு மொத்தம் ரூ. 5000ம்
பரிசளிப்பது என முடிவு செய்துள்ளோம்.

குறுநாவல்கள் முழுத்தாளில் சுமார் 50 பக்கங்கள் இருக்கலாம். அமுதசுரபி இதழில் 18 பக்கங்களுக்கு மேற்படாமல் இருத்தல் வேண்டும்.

குறுநாவல்கள், எழுதுபவரின் சொந்தக் கற்பனையாகவும், 'அமுதசுரபி'க்காக பிரத்தியோகமாக எழுதப்பட்டவையாகவும் இருத்தல் வேண்டும். மொழி பெயர்ப்பாகவோ, தழுவலாகவோ இருக்கக் கூடாது. சமூகப் பிரச்னைகளை, வரலாற்றுச் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டவையாகவும் இருக்கலாம்.

நடுவர் குழுவினர் ஐந்துக் குறுநாவல்களைத் தேர்ந்தெடுப்பர். பரிசுக்குத் தேர்ந்தெடுக்கப்படும் குறு நாவல்களை நூல்களாக வெளியிடும் முதல் உரிமை 'அமுதசுரபி' வெளியீட்டாளர்களான **ஸ்ரீராம் டிரஸ்ட்டைச்** சாரும்.

பரிசுக்கு ஏற்றுக் கொள்ளப்படும் ஐந்துக் குறுநாவல்களைத் தவிர, பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்படும் குறுநாவல்களுக்குச் சன்மானம் உண்டு.

போட்டியில் தேர்ந்தெடுக்கப்படாத நாவல்களைத் திரும்பப் பெறப் போதுமான தபால்தலைகள் இணைக்கப்பட்டிருக்க வேண்டும். தபால்தலைகளுடன் வராத நாவல்களை திருப்ப அனுப்ப இயலாது.

குறுநாவல் போட்டித் தொடர்பாக எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ள இயலாது.

முடிவு தேதிக்குப் பிறகு கிடைக்கும் குறுநாவல்கள் போட்டிக்கு ஏற்கப்படமாட்டா.

குறுநாவல் போட்டியின் முடிவு தேதி **15-9-84**
உறையின் மீது **குறுநாவல் போட்டி** என்று குறிப்பிட வேண்டும்.

ஆசிரியர்,
**அமுதசுரபி,**
தபால் பை எண் 5043,
145, லிங்கிச் செட்டி தெரு.
சென்னை-600 001

என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

ஆசிரியர்

# விட்டேகர் விவகாரம்

## பாம்புப் பண்ணையில் பரபரப்பு

கிண்டி பாம்புப் பண்ணையில் விஷமுள்ள பாம்புகள் ஊர்வது ஒருபுறமிருக்க பல விஷமத்தனமான காரியங்களும் நடைபெறுகின்றன. பாம்புப் பண்ணையிலும் சம்பந்தப்பட்டவர்களிடமும், பேசித்திரட்டப்பட்ட பல பரபரப்பான விஷயங்கள்:

**மர்மக் கடிதம்!**

கடந்த மே மாதம் 11–ம் தேதி கிண்டி பாம்புப் பண்ணையின் செயலாளருக்கு, வனத்துறையின் செயலாளரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் மிகவும் அபூர்வமான சில உடும்புகள், ஆமைகள், பாம்புகள் போன்றவற்றைப் பிடிப்பதற்கு (ஒவ்வொன்றிலும் 12) அனுமதி வழங்கப்பட்டிருந்தது.

இந்தக் கடிதத்தைப் படித்துத் திடுக்கிட்டார் செயலாளர் ஜகன்நாத ராவ். 'நான் அனுமதி கேட்டு வனத்துறைக்குக் கடிதமே எழுதவில்லை. எவரோ என் பெயரில்—எழுதியிருக்கிறார்கள். இப்படி ஒரு அனுமதி எங்களுக்குத் தேவையில்லை' என்று பதில் எழுதி விட்டார். அவருக்குச் சந்தேகம் பாம்புப் பண்ணையின் டைரக்டர் ரோமுலஸ் விட்டேகர் தான் 'இப்படி அனுமதி கேட்டு எழுதியிருக்கவேண்டுமென்று.

விட்டேகரோ ''நான் அந்த மாதிரி எந்த ஒரு கடிதமும் — செயலாளரின் பெயரில் அரசாங்கத்துக்கு எழுதவில்லை. இந்த விஷயம் எனக்கு ஆச்சரியம் தருகிறது'' என்கிறார்.

**புதிரான விஷயம்!**

எழுதியது யார் என்பது ஒருபுறம் இருக்க, இதில் இன்னொரு வியப்பளிக்கிற விஷயமும் இருக்கிறது. பிடிக்க அனுமதி வழங்கப்பட்டுள்ள ஊர்வன வகைகள். தென்னிந்தியாவில்—குறிப்பாக தமிழ்நாட்டுப் பகுதியில் இல்லாதவை. எனவே, பாம்புப் பண்ணைக்குத் தேவை எனில், அவற்றை மற்ற மாநில வனத்துறையினரிடமிருந்து வாங்கத்தான் வேண்டுமேயொழிய, பிடிக்க முடியாது. அப்படி இருக்கும் போது இப்படி ஒரு கடிதத்துக்கு அவசியம் என்ன என்பது புதிராகவே இருக்கிறது.

**அறைக்கு 'சீல்' வைத்தனர்**

கடிதப் புதிர் ஒருபக்கம் விடுவிக்கப்படாமலேயே இருக்க இன்னொரு பரபரப்பான விஷயமும் கடந்த ஜூன் 7–ம் தேதி பிற்பகலில் நடைபெற்றிருக்கிறது. டைரக்டர் விட்டேகர் ஏதோ வேலை காரணமாய்க் கொடைக்கானல் போயிருந்த போது, பாம்புப் பண்ணையின் செயலாளரும், சில காட்டிலாக்கா அதிகாரிகளும் பாம்புப் பண்ணையிலுள்ள விட்டேகரின் அறைக்குப் போய், கதவை 'சீல்' செய்தனர். விட்டேகர் சென்னை திரும்பியபின், அறையை மீண்டும் திறந்த போது, உள்ளே ஒரு டிரங்குப்பெட்டி, இரண்டு தட்டுகள், ஒரு பிரீஃப் கேஸ் இவை நிறைய பதப்படுத்தப்பட்ட பாம்புகள் (இறந்த நிலையில்) வைக்கப்பட்டிருந்ததைக் கண்டனர்.



கரங்களில் விஷப்பாம்பு



பண்ணைக்குரிய விட்டேகரின் அறை



✖ பூட்டியே இருக்கும் மியூசியம்

## திருட்டுத்தனமாய் ஏற்றுமதி?

ஜகன்னாதராவ் "அந்த அறைக்குள்கண்டு பிடிக்கப்பட்ட பதப்படுத்தப்பட்ட பாம்புகள் வெளிநாடுகளுக்குத் திருட்டுத் தனமாய் ஏற்றுமதி செய்வதற்காகத்தான் விட்டேகர் வைத்திருந்தார்; உள்ளே டிரங்குப் பெட்டியுடன் கண்டெடுக்கப்பட்ட கலர் போட்டோ ஆல்பம் (பலவித பாம்புகளின் போட்டோக்கள் கொண்டது.) அயல்நாட்டுக் கஸ்டமர்களுக்குப் பாம்பு வகைகளை விற்கும் முன்பு, மாதிரிகளைக் காட்டுவதற்காகப் பயன்படுத்தப்படுவது: இறந்த பாம்புகளில் கட்டப்பட்டிருந்த அயல் நாட்டு முத்திரை அட்டையில் இருக்கிற எண்கள் (4000 பக்கமாய் வரிசை எண்கள்) ஏற்கெனவே பாம்புகள் திருட்டுத்தனமாய் அனுப்பப்பட்டுள்ளதற்கு ஆதாரம்" என்று அடுக்கிக் கொண்டே போகிறார்.

## விட்டேகர் சொல்கிறார்!

"நான் இல்லுமுல்லு பண்ணுவதாய்ச் சொல்வது பொய்: அவர்கள் வேண்டுமென்றே, நான் ஊரில் இல்லாத போது, பாம்பு ஸ்பெஸிமென்களை என் அறைக்குள் வைத்துவிட்டு, பின் காட்டிலாகா அதிகாரிகளை அழைத்து வந்து காட்டி, 'ஸீல்'வைத்து நாடகமாடி, எனக்கு அவப்பெயர் ஏற்படுத்த முயல்கிறார்கள்; இது ஜோடிக்கப்பட்ட கேஸ்; சில ஸ்பெஸிமென்கள் டெல்லி தேசிய மியூசியத்துக்கு அனுப்புவதற்காகப் பண்ணையில் வைக்கப்பட்டிருந்தவை" என்கிறார் விட்டேகர்.

## பண்ணை நிர்வாகம்!

இந்தக் கதை இப்படி இருக்க, பாம்புப் பண்ணையின் நிர்வாகம் எப்படி நடைபெறுகிறது என்பதைத் தெரிந்து கொள்வோம். பண்ணையை 11 பேர் கொண்ட (டிரஸ்ட்) அறக்கட்டளை நிர்வகிக்கிறது. இதன் தலைவர் மீனாட்சிசுந்தரம் என்ற வக்கீல். இதன் செயலாளர் முன் சொன்ன ஜகன்னாதராவ். இவர் வனவிலங்கு வல்லுனரும், தொழிலதிபரும் ஆவார். இதுதவிர டாக்டர்கள் போன்ற பிரமுகர்கள் 5 பேரும் ரோமுலஸ் விட்டேகரும் டிரஸ்டிகள். மேலும் வனத் துறை அதிகாரிகள் மூவரும் இந்த டிரஸ்டில் இடம் பெற்றுள்ளனர். விசாரித்துப் பார்த்ததில் இந்த டிரஸ்டில் இரண்டு கோஷ்டி இருப்பது தெரிய வருகிறது. ஒன்று விட்டேகரின் சார்பு. இன்னொன்று அவருக்கு எதிரானது. சிலகாலம் முன்புவரை டிரஸ்டிகளில் ஒருவராய் இருந்த இந்தியன் எக்ஸ்பிரஸ் ஹாரி மில்லர் இந்த பாலிடிக்ஸ் காரணமாக, டிரஸ்டிலிருந்து விலகிவிட்டார்.

## வசூலில் முறைகேடா?

பாம்புப் பண்ணை ஆரம்பிக்கப்பட்ட போது (71–ல்) அதன் நுழைவுக்கட்டணம் மூலமான வருமானம் ஆண்டுக்குச் சில ஆயிரங்கள் (மாதம் சுமார் ரூ. 300) ஆனால் இப்போது ஆண்டு வருமானம் மூன்று லட்சத்தைத் தாண்டி விட்டது. (கட்டணம் 50 பை – பெரியவர்களுக்கு, 25 பை – சிறியவர்களுக்கு) இந்தத் தினசரி வசூல், கணக்கு சரி பார்க்கப்பட்டு, மறுநாள் அப்படியே பாங்கில் செலுத்தப் படவேண்டும் என்பது விதி. ஆனால் பணம் முழுவதும் அப்படிக் கட்டப்படவில்லை. அங்கிருந்த ஊழியர் அவ்வப்போது சிலநூறுகளை அமுக்கிக் கொண்டு, மீதியைத்தான் பாங்கில் கட்டினாராம். இது கண்டுபிடிக்கப்பட்டு, அவர் வீட்டுக்கு அனுப்பப்பட்டார். ஆனால் இந்த விவகாரத்தில் சம்பந்தப்பட்ட



✖ பதப்படுத்தப்பட்ட பாம்புகள் ஆய்வுக்கூடத்தில்

மற்ற நபர்கள் யார், யார் என்பது மர்மமாய் இருக்கிறது.

### காண்ட்ராக்டில் தில்லுமுல்லா?

கிண்டி பாம்புப் பண்ணை தமிழக அரசின் வனப்பிராந்தியத்தில் அமைந்துள்ளது. இது நெடுங்கால குத்தகைக்குப் பண்ணைக்குத் தரப்பட்டுள்ளது. இந்தப் பகுதியில் நிலையான கட்டிடங்கள் ஏதும் கட்டக்கூடாது என்பது சட்டம். ஆனால் ஒரு சில கட்டிடங்கள் பாம்புப் பண்ணையினுள் கட்டப்பட்டுள்ளன. 'இதில் காண்ட்ராக்ட் விடுவதில் செயலாளருக்குப் பங்கு உண்டு; அவரது கம்பெனிக்கே காண்ட்ராக்ட் விட்டார்' என்பது ஒரு குற்றச்சாட்டு.

இதற்கு செயலாளர் ஜகன்னதரால், ''இது பல வருஷத்துக்கு முந்தின விவகாரம் — முறைப்படி டெண்டர் விடப்பட்டு, குறைந்த விலைக்குத்தான் காண்ட்ராக்ட் விடப்பட்டது. மேலும் இருக்கிற கட்டிடங்கள் நிரந்தரமானவை அல்ல. எந்த நிமிடமும் இடிக்கப்படக் கூடியவை. பலமான அஸ்திவாரம் இல்லாதவை'' என்கிறார்.

### விட்டேகர் பற்றி:

விட்டேகர் உலகப் புகழ்பெற்ற பாம்பு, முதலைப் பண்ணை அமைப்பாளர். பிறப்பால் அமெரிக்கர். சின்ன வயதிலேயே பாம்பு முதலியவை மீது ரொம்ப ஆசை கொண்டவர். அப்போது தான் இந்தியா வந்தார். பள்ளிப்படிப்பு கொடைக்கானலில். பள்ளிப் படிப்பைப் பாதியில் நிறுத்திவிட்டு, மீண்டும் அமெரிக்கா போய், மியாமியில், உலகப் பிரசித்தி பெற்ற வல்லுனரான பில் ஹாஸ்ட்டிடம் உதவியாளராகி பல ஆண்டுகள் இருந்து விட்டு, இந்தியா திரும்பினார். 1969—ல் தாம்பரத்துக்குப் பக்கத்தில் ஒரு சிறிய இடத்தில் சில பாம்புகளை வைத்துப் பண்ணை நடத்தினார். இதுவே சென்னை நகரில் ஏராளமான டூரிஸ்ட்களைக் கவர்ந்திருக்கிற பாம்புப் பண்ணைக்கு அஸ்திவாரம். பாம்புப் பண்ணையின் இன்றைய பிரம்மாண்டமான வளர்ச்சிக்கு முக்கியமான காரணம் விட்டேகர் என்பது பலரும் ஒப்புக்கொள்ளும் கருத்து.

மானேஜர்: ''இப்ப டைப் பண்ணின இந்த மேட்டருலே ஏன் மஞ்சள் தடவியிருக்கு?''
டைப்பிஸ்ட்: ''அது என்னோட மேரேஜ் அட்வான்ஸ் சாங்க்ஷன் ஆர்டர் சார்!''

—வாணிபாலன்.



### தவறான கருத்து:

''ஆனால் இக்கருத்து முழுக்க முழுக்கத் தவறானது'' என்கின்றனர் சில டிரஸ்டிகள். ''சில பாம்புகளை வைத்துக் கொண்டு 'ஷோ' நடத்திக் கொண்டிருந்த விட்டேகரை அவர் பாம்புகளின் மேல் கொண்டிருக்கும் ஆர்வம் காரணமாக, இந்தப் பண்ணையின் டைரக்டராய்ப் போட்டோம். அதோடு மட்டுமில்லாமல், பண்ணையை நிர்வகிக்கிற டிரஸ்டிகளில் ஒருவராக்கினோம். சம்பளம் தவிர வேறு பல வகை வசதிகளையும் செய்து கொடுத்திருக்கிறோம். சம்பளம் வாங்குகிறவர், டிரஸ்டியாக இருக்கக் கூடாது. ஆனாலும் விட்டேகருக்கு விதிவிலக்கு அளித்திருக்கிறோம். அவருக்கு ஏக பப்ளிஸிடி. அவர் நெருங்கிய சகாவான ஹாரி மில்லர், 'ஸ்நேக் பார்க் என்றால் விட்டேகர், விட்டேகர் என்றால் ஸ்நேக் பார்க்' என்கிற 'இமேஜை' ஏற்படுத்திவிட்டார். விட்டேகர் நடுவில் இரண்டு வருஷம் நியூகினி போயிருந்த போது, பாம்புப்பண்ணையை இழுத்தா மூடி விட்டோம்? நன்றாய்த் தானே நடத்தினோம்?'' இது சில டிரஸ்ட்களின் வாக்குவாதம்.

### இன்னொரு பாம்புப் பண்ணை!

இதற்கிடையில், இன்னும் சில வருடங்களில் பாம்புப் பண்ணையையே வேறு இடத்துக்கு மாற்றி விடுவதில் சில டிரஸ்ட்டிகள் தீவிரமாய் இருக்கிறார்கள். புதுப் பாம்புப் பண்ணைக்கென மகாபலிபுரம் போகிற வழியில் 'கொட்டிவாக்கம்' என்ற இடத்தில் சில ஏக்கர் நிலம் ஏற்கெனவே வாங்கப்பட்டு விட்டது. புது இடத்துக்கு இத்தனை டூரிஸ்ட் அட்ராக்ஷன் இருக்குமா? மகாபலிபுரம் போகும் வழி என்பதால், கூட்டத்துக்குக் குறைவிராது என்றே நம்பப் படுகிறது. புதுப் பண்ணை விட்டேகர் சம்பந்தப்படாத பண்ணையாய் இருக்க வேண்டும் என்று முனைப்பாய்க் காரியங்கள் நடைபெறுகின்றன.

### கடைசியாக...

பாம்புப் பண்ணையில் சில வேண்டாத விவகாரங்கள் நடக்கத்தான் செய்கின்றன. பாம்புத்தோல், பாம்பின் விஷம் இவை மிக விலையுயர்ந்தவை. இவை விஷயமாய்த் தில்லுமுல்லுகள் நடந்தால், அரசு உடனடி விசாரணையில் இறங்கி விஷமத்தனம் செய்கிற மனிதப் பாம்புகளை தோலுரித்துக் காட்டியே தீரவேண்டும். செய்யுமா?

—ஜூலி

புகைப்படங்கள்: சேகர்

# யோகாசன மகிமை

**யோ**கம் என்பது மனிதனுடைய எண்ணங்களைக் கட்டுப்படுத்தி ஒருமுகப்படுத்த உதவுகிறது.

ஆசனத்துக்கு இன்றியமையாதது ஆசார நியமம். வயிறு புடைக்க மூன்று வேளையும் சாப்பிட்டு விட்டு, தினமும் சிரசாசனம் செய்தால் நோய் தான் மிச்சம். ஆசனம் பழகுகிறவர்கள் எதிலும் மிதமாக இருக்க மனத்தை எளிதில் கட்டுப்படுத்துகிற ஆற்றல் பெறுவார்கள்.

ஆசனப் பயிற்சியைத் தொடங்கும்போது, ஒவ்வொருவரது உடல் அமைப்புக்கும் பார்க்கும் தொழிலுக்கும் ஏற்ப இன்னின்ன ஆசனங்களைச் செய்யலாம் என்பதை ஓர் அனுபவம் நிறைந்த ஆசிரியரே நிர்ணயிக்க முடியும். எனவே ஆலோசனை பெற்றுப்பழக ஆரம்பிப்பது நலம் என்கிறார் யோகி. **வேங்கடராமன்**. எழுபத்து மூன்று வயதிலும் இவர் சுறுசுறுப்பாக இயங்குவது இந்த யோகப் பயிற்சியினால் தான்.

முதலில் சில தினங்கள் குருவை அணுகினால் பிறகு நாமே பயிலலாம். யோகி வேங்கடராமன் சென்னை எலியட்ஸ் சாலையிலுள்ள இண்டர்நாஷனல் யோகா இன்ஸ்டிடியூட்டில் பயிற்சியளித்து வருகிறார்.

பாவன முக்தாசனம் என்பது எளிமையான ஆசன வகைகளுள் ஒன்று. சிறுவர் முதல் வயதானவர் வரை ஆண், பெண் இரு பாலாருமே சுலபமாகச் செய்யலாம்.

இதனால் 'மனித மின்சாரம்' என்ற குண்டலினி சக்தி இயங்கத் தொடங்குவதால், பல நோய்கள் குணமாகின்றன.

நோயற்றவர்களும் இதனைச் செய்து பழகினால் உடல் பிடிப்புகள், வலிகள் எல்லாம் விட்டுவிடும். உடல் இலேசாக உணரப்படும். நாள் முழுவதும் உற்சாகம் ததும்பும்.

### பயிற்சி முறை:

முதலில் தரை விரிப்பில் மல்லாந்து படுத்துக் கொண்டு கால்களை நன்கு நீட்டிக் கொள்ள வேண்டும். பின்னர் கால்கள் இணைந்திருக்கும் நிலையில் இரண்டு முழங்கால்களையும் அப்படியே உயர்த்தி வயிற்றில் வைத்து நசுக்கி, இரண்டு கைகளையும் சேர்த்து அணைத்துக் கொள்ள வேண்டும். தலை விரிப்பிலிருந்து உயர்ந்து முழங்கால்களுக்கிடையில் முகவாய் புதைய, இந்த நிலையில் முன்னும் பின்னும் மூன்று முறை அசைய வேண்டும். (படம்). இந்த நிலை வரை பழக்கத்தில் சுலபமாகவே வரும். இதுவே போதுமானதும் கூட.

இன்னும் விரிவாகச் செய்து பார்க்க வேண்டுமென்று விரும்பினால் முழங்கால்களை வயிற்றோடு அழுத்தி அணைத்துப் பிடித்த நிலையில் இடப்பக்கம் உருள வேண்டும். சரிந்த நிலையில், வலது கையை எடுத்து நன்றாக நீட்ட வேண்டும். உடலின் மேல்பாகத்தை வலது பக்கம் திருப்பி, வலது கன்னம் தரையை நோக்கும்படி செய்ய வேண்டும். அப்படியே வலது கையை ஒரு வட்டமடித்து மறுபடி முழங்கால்களை இரண்டு கைகளாலும் பிடித்துக் கொள்ள வேண்டும்.

இனி அப்படியே மெல்ல வலது பக்கம் சரிந்து மேல் உடம்பை இடது பக்கம் திருப்பி, இடது கையை நன்றாக நீட்டி முன் சொன்ன மாதிரியே வட்டமடிக்க வேண்டும்.

அதன் பிறகு படிப்படியாக 'மெல்லப் பழைய நிலைக்கு வந்து விடலாம்.

பேட்டிக் கட்டுரை: **சுப்ரபாலன்**

படத்தில் **ஏ. முகமது ஹனீபா**

புகைப்படம்: **தாமோதரன்**

# பாவன முக்தாசனம்



## சைலே...ன்ஸ்



※ ரேவதி

### சசிகலா

கற்பகம் ஸ்டுடியோ, கே. எஸ். மாதங்களின் 'கொலுசு' படப்பிடிப்பு. 'சினிமா தேவதை' டிரஸ்ஸில் (வ...ழ...க்கமாக பாரதிராஜா பாடல் காட்சிகளில் வருமே, வெள்ளை உடை... அதே அதே ) சசிகலா.

பாதியில் விட்டுவிட்டு வந்த பள்ளிப் படிப்பை இனி தொடர்வதாக இல்லையாம். தபால் மூலம் படிக்கப் போவதாக வந்த செய்தியை மறுத்தார்.

சசிகலா, தமிழ் தவிர| இன்னும் வேறு மொழி எதற்கும் போகவில்லை.

''தொடர்ந்து நான் கிளாமரான கேரக்டர் களிலேயே நடிப்பதாய் ஒரு குற்றச்சாட்டு. இனி அதற்கு இடமிருக்காது. அன்பின் முகவரியில் துடுக்குத்தனமான பெண்ணாக வும், 'மண் சோறு' படத்தில் பாசமுள்ள தாயாகவும் நடித்திருக்கிறேன்'' என்றார்.

சமீபத்தில் தெங்கு மராட்டாவிற்கு அவுட்டோர் போயிருந்தாராம்.

''ஒரு நதிக்கரையில் நான் குளித்துக் கொண்டே பாடுவதாகக் காட்சி. தண்ணீர் படுவேகமாக ஓடிக் கொண்டிருந்தது. திடீ ரென்று நான் உட்பட, லைட்பாய்ஸ், 'ரிஃப்ளக்டர்' எல்லோரையும் தண்ணீர் இழுத்துக் கொண்டு போய் விட்டது. கடைசி யில் ஒருவர் நீரில் பாய்ந்து — ஈரம் சொட்டச் சொட்ட என்னைக் கரைக்குத் தூக்கி வந்தார்'' என்றார். யார் அந்தப் புண்ணியவான்?

சசிகலா சொன்னது: ''முதல் படத்தில் நடிக்கும் போது, பள்ளிக்கூடம் போகிற மாணவியாக உணர்ந்தேன். இப்போது காலேஜ் போகிற மாதிரி இருக்கிறது.''

''சில பேர் காலேஜ் முடிந்ததும் டுடோரி யல் காலேஜ் போகும்படி ஆகிவிடுகிறதே?'' என்றேன்.

''நான் அப்படி இல்லை. மேல் படிப்புக்கு அமெரிக்கா போகிற மாதிரியானவள்'' என்றார். சாதுரியம் தான்!

### தீபக்

ஹீரோ பஞ்சம் உச்சத்தில் இருக்கிற நேரம், இது. 'வேங்கையன்' படத்தின் மூலம் தமிழுக்கு ஒரு புதிய ஆக்ஷன் ஹீரோ அறிமுகமாகிறார். பெயர்: தீபக்.

சென்னையில் பிறந்து, படித்து முடித்து, கேரளாவிற்குப் பணியாற்றப் போனவர் சினிமாவிற்காக மீண்டும் தமிழ்நாட்டுக்கு வந்திருக்கிறார்.

தமிழ், மலையாளம், இந்தி, ஆங்கிலம்—நான்கு மொழிகளும் தெரிந்த இவர், இதுவரை எந்தப் படத்திலும் தலைகாட்டி யது கூடக் கிடையாது.

வசன கர்த்தாவான ஏ. எல். நாராயணன் இந்தப் படத்தில் முதன் முதலாக ஒரு பாடல் எழுதி இருக்கிறார்.

※ தீபக்

# ஆக்ஷன் ஹீரோ அறிமுகம்!





✕ ரங்கராஜ்



✕ ஜி. ஆர். நாதன்

## ரேவதி

இனி படங்களில் ரேவதி கார் ஓட்டுகிற மாதிரி காட்சி வந்தால் அவருக்கு 'டூப்' போட வேண்டிய அவசியம் இல்லை. ரேவதியே கார் ஓட்டக் கற்றுக் கொண்டுவிட்டார்.

விஜயா கார்டனில் 'வைதேகி காத்திருந்தாள்' படப்பிடிப்பு. .வெள்ளைநிற ஃபியட் காரை எடுத்துக் கொண்டு அப்படியும் இப்படியுமாய் வலம் வந்தார். அதற்காக டைரக்டர் சுந்தர்ராஜனிடம், .''ஷாட் ரெடியானது கூட தெரியாமல், கார்சவாரி கேட்குதோ?'' என்று திட்டும் வாங்கிக் கட்டிக் கொண்டார்

வை. காத்திருந்தாள். உட்பட மூன்று படங்களில் நடித்து வருகிறாராம்.

''மண்வாசனை, பொண்ணு புடிச்சிருக்கு, புதுமைப்பெண் என்று வரிசையாக எல்லாப் படங்களிலும் எனக்கு சோகமான கேரக்டர்களாகவே அமைந்து விட்டது. வெளியூரிலிருந்து ஒரு ரசிகர். 'இப்படி எல்லாப் படங்களிலும் பேத்தடிக்காகவே வந்து என் கண்களைக் குளமாக்கி விடுகிறீர்கள். இனியாவது சந்தோஷமான பாத்திரங்களில் வாருங்களேன்' என்று பத்துப் பக்கத்திற்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார்'' என்றார்.

ரேவதிக்கு ஒரு ஆசை.

துடுக்குத் தனமான கேரக்டர் — அதுவும் கொச்சையான தமிழ் பேசுகிற சேரிப் பெண்ணாக — நடிக்க விருப்பமாம்.

யாராவது ஒரு டைரக்டர் இது சம்பந்தமாகக் கவனிப்பாராக!

## ஜி. ஆர். நாதன்

''இப்போது இருக்கிற பல புதியகேமிரா மேன்களை 'பிளாக் அண்ட் ஒயிட்' டில்படம் பிடிக்கச் சொன்னால் கேமிராவைப் போட்டு விட்டு ஓடிவிடுவார்கள். பர்ப்பசே இல்லாமல் பல இடங்களில் பேக் லைட்டிங் வருகிறது. கேட்டால், அதுதான் சார் இப்போது ஸ்டைல் என்கிறார்கள்.

''கண்ணுக்குக் குளுமையாகக் காட்டுவதற்குத்தான் அவுட்டோருக்கு வருகிறோம். ஆனால் கதாநாயகியின் முகத்திற்கு போக்கஸ் கொடுத்து விட்டு மீதி எல்லாவற்றையும் அவுட் ஆப் போகஸில் காட்டுகிறார்கள். அப்புறம் அவுட்டோருக்கு வந்து தான் என்ன பயன்?'' என்றார் ஜி. ஆர். நாதன்.

வானம்பாடியிலிருந்து பற்பல படங்களுக்கு ஒளிப்பதிவு செய்தவர். சிவாஜி புரொடக்ஷன்ஸின் ஆஸ்தான கேமிராமேன். இவர் ஒளிப்பதிவில் இப்போது வெளிவந்திருக்கிற படம் — மருதி!

## கே. ரங்கராஜ்

கே. ரெங்கராஜ். 'பொண்ணு புடிச்சிருக்கு' மூலம் வெற்றிப்பட டைரக்டர்கள் பட்டியலில் சேர்ந்து விட்டவர். சுஜாதா டப்பிங் தியேட்டர். 'உன்னை நான் சந்தித்தேன்' டப்பிங்கில் மும்முரமாக இருந்தார்.

''ஏற்கெனவே நிழல்கள், அலைகள் ஓய்வதில்லை போன்ற படங்களில் நடித்திருக்கிறீர்கள், நல்ல உடல்வாகு வேறு இருக்கிறது. உங்கள் படங்களில் நீங்களே ஹீரோவாக நடிக்கலாமே?'' என்றேன்.

''பெரிய டைரக்டரின் படத்தில் நடித்தால் நம் குறைகளை அங்கங்கே சரிசெய்து, நல்லமாதிரியாகக் காட்டி விடுவார்கள். என் டைரக்ஷனில் நானே நடிப்பது என்பது ரொம்ப யோசிக்க வேண்டிய விஷயம். ஆனாலும் அவ்வப்போது ஏதேனும் சின்ன வேஷங்கள் செய்வேன்'' என்றார்.

ரங்கராஜுக்கு ஒரு மனக்குறை. ''பத்திரிகை நண்பர்கள் நான் சொல்கிற வாக்கு மூலத்தைக் குறிப்பெடுத்துக் கொண்டுபோய் எழுதும் போது, அதை அழகுபடுத்துவதாக நினைத்து அங்கங்கே தங்கள் கைச்சரக்கையும் சேர்க்க — கடைசியில் அதன் அர்த்தமே மாறி விடுகிறது'' என்றார்.

-சம்பத்ஜி


'அந்த பொண்ணும் ராகமாலிகா சேலை கட்டிண்டிருந்தா நீதான்னு நெனைச்சுதான் கையை பிடிச்சு இழுத்தேன்"
''மானம் போச்சு பாருங்க! இவ்வளவு நாளாயும் இன்னுமா என்னை அடையாளம் தெரியலே?"

# குளோஸ் அப்

## கலைஞர் கெட்டிக்காரர்!

சினிமாப் பின்னணியிலிருந்து அரசியலில் முன்னணிக்கு வந்தவர்களைத் தென்னகம் நிறையவே கண்டிருக்கிறது. கலைஞர் கருணாநிதியும் சினிமா கதை – வசன கர்த்தா என்ற முறையில் பிரபலமடைந்தார் என்றாலும் அவர், முற்றும் முதலும் ஒரு அரசியல்வாதியே. சினிமாத் துறை அவருக்கு இன்று மட்டுமல்ல, அன்றைக்குக் கூட இரண்டாம் பட்சம்தான். ஆரோக்கியமான ஜனநாயக அரசியலுக்கு இவரைப் போன்ற அரசியல்வாதிகள் நிறையவே தேவை. அரசியல் பிரச்னைகளின் ஆழம், வீச்சு, தன்மை, செயல்பாடு முதலியவற்றை முழுமையாகப் புரிந்து கொண்டு விடுகிற ஆற்றல் அவருக்கிருக்கிறது. சரித்திர உணர்வுள்ள மிகக் குறைவான அரசியல்வாதிகளுள் ஒருவர்.

இன்னொரு உண்மையையும் குறிப்பிட வேண்டும். அவர் கண்டன விமர்சனங்களைச் சகித்துக் கொள்வதில்லை என்பதை நான் கவனித்திருக்கிறேன். ரொம்பவும் விசால மனப்பான்மை கொண்டவர் போல் காட்டிக் கொண்டாலும் உண்மையில் குறை கூறி விமர்சிக்கப்படுவதை அவர் ஏற்றுக் கொள்வதில்லை. தம்மிடம் குறையில்லாத போது எதற்குக் குறை கூறப்பட வேண்டும் என்று ஒருவேளை அவர் எண்ணுகிறாரோ என்னவோ? தி. மு. க. பண்பாட்டில் எனக்கு இந்த விஷயத்தில் மட்டும் ஆதங்கம் உண்டு. தவறுகளை, குறைகளை எடுத்துக் காட்டும் எந்த விமர்சனமும் ஏதோ உள் நோக்குடன் செய்யப்படுவதாக எண்ணுகிறார்கள். அ. தி. மு. க. வை. நான் குறை கூறினால் நான் தி. மு. க. அனுதாபி என்றும் தி. மு. க.வைக் குறை கூறினால் அ.தி.மு.க. அனுதாபி என்றும் கருதுகிறார்கள். நான் ஒரே சமயத்தில் எப்படி இரு கட்சிகளின் அனுதாபியாகவும் இருக்க முடியும்? ஒரு பத்திரிகை ஒரு பிரச்னையை ஆராய்ந்து, கட்சி சார்பற்று நடுநிலையில் சுதந்திரமாகச் செயல்பட முடியும் என்று நம்பவே முடியாதவர்களாய் இருக்கிறார்கள். ஒரு சமயம் நான் கருணாநிதியைச் சந்திக்க சட்டசபைக் கட்சிக் காரியாலயத்தில் காத்திருந்தபோது



பல தி. மு. க. எம். எல். ஏக்கள் என்னிடம் வந்து, நான் மலையாளியாக இருப்பதால் தான் எனது சமீபத்திய கட்டுரையில் நான் தி. மு. க.வைக் குறை கூறி விமர்சித்தேன் என்று குற்றம் சாட்டினார்கள். இது எனக்கு அதிர்ச்சி அளித்தது. 'இப்படிப் பத்தாம்பசலித்தனமான விதத்தில் இன்றைக்குக் கூடச் சிலர் சிந்திக்கிறார்களே?' என்று வியந்து போனேன்.

கருணாநிதி மிகுந்த தன்னம்பிக்கை உள்ள மனிதர். யாரிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை நன்றாக அறிந்தவர். யார் யாரை எப்படி ஆட்டி வைக்கலாம் என்பதையும் புரிந்து கொண்டிருக்கும் சமர்த்தர். தமிழ்நாட்டிலேயே மிகவும் கெட்டிக்காரரான அரசியல்வாதி அவர்தான்.

என்னைத் தர்ம சங்கடத்தில் அவர் ஆழ்த்திய நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. 1982–ல் பெரியகுளம் தேர்தலைப் பற்றி எழுதச் சென்றிருந்தேன். எம். ஜி. ஆர்., சிவாஜி, கருணாநிதி ஆகிய அனைவரது பேச்சுக்களையும் கேட்டேன். ஓரிடத்தில் கருணாநிதி பேச்சைக் கேட்கப் போன போது ஏற்கெனவே கூட்டம் ஆரம்பமாகி விட்டது. ஏக நெரிசல். மெல்ல மெல்லப் புழுவாக நெளிந்து வழி ஏற்படுத்திக் கொண்டு மேடையை நெருங்கினேன். மேடையில் என்ன நடக்கிறது என்று பார்க்கும் ஆவல். கருணாநிதி என்னைப் பார்த்து விட்டார். உடனே அவரது பண்பாடு என்னை மேடைக்கு அழைத்தது. ஜன நெருக்கடியில் நான் நசுங்குவதைக் காண அவருக்குப் பொறுக்கவில்லை. ஆனால் எனக்கோ மேடையில் அரசியல்வாதிகளுடன் சேர்ந்து அமரப் பிடிக்கவேயில்லை. கருணாநிதி விட்டாரில்லை. வற்புறுத்தினார். கடைசியில் நானும் இந்த நெரிசலிலிருந்து தப்பினால் போதும் என்று மேடை ஏறி அவருக்குப் பின்னால் ஓர் ஆசனத்தில் கூனிக் குறுகி மறைந்து உட்கார்ந்து கொண்டேன். கருணாநிதிக்கு அன்று கடுமையான தலைவலி. இருந்த போதிலும் என் நலனில் அக்கறை கொண்டு குசலம் விசாரித்ததுடன் கனிவுடன் உரையாடவும் செய்தார்.

அனிதா பிரதாப் கூற எழுதியவர்:
**எஸ். சந்திரமௌலி**

அனிதா பிரதாப் போட்டோ: **சேகர்**



## அத்தியாயம் 20

சின்ன உடையாரையும், ராணியையும் திரு சிலகணங்கள் நிறுத்தி வைத்தே பேசியது உடனிருந்த மற்றவர்களுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. எத்தனை பெரிய பதவியும், பவிசும் வந்தாலும் அவனோடு உடன் பிறந்த குணமாகிய தடித்தனம் இன்னும் அவனோடு சேர்ந்தே இணைந்திருப்பது போலத்தான் தோன்றியது. தடித்தனமும், பழிவாங்கும் முனைப்பும் பெருந்தன்மை இன்மையின் அடையாளங்களாகத் தோன்றின. தனக்கு உள்பட்டணத்தார் கொடுக்க இருக்கும் வரவேற்பை அரண்மனை வாசலில் மேடை போட்டு அளித்தால்தான் பெருமை என்று திமர் என வேறொரு விதமாக அடம்பிடிக்க ஆரம்பித்தான்திரு. கொஞ்சம் விட்டுக்கொடுக்க ஆரம்




பித்திருக்கும் ஜமீன்தாரை அவன் மேலும் அதிகமாகச் சோதனை செய்வதாக உடனிருந்த எல்லோருக்கும் தோன்றியது. பொறுமை இழந்து சின்ன உடையார் கோபித்துக் கொண்டு வெளியேறப்போகிறார் என்றே அப்போது எல்லோரும் எதிர்பார்த்தார்கள் ஆனால் உடையார் தங்கக் கம்பியாக இழுத்த இழுப்புக்கு வந்தார். ''அதற்கென்ன? செய்தால் போயிற்று!'' – என்று திருவின் வேண்டுகோளுக்கு உடன் இசைந்து விட்டார் அவர். தன்னுடைய பரமவைரியும், எதிர்க்கட்சிக்காரரும், தன்னிடம் தேர்தலில் தோற்றவருமாகிய ஜமீன்தாரே தன்னை மதித்துப் பயப்படுகிறார் என்று எழிலிருப்பு ணர் மக்களிடம் ஒரு பிரமையை உண்டாக்கி விட வேண்டுமென்று திரு நினைத்தான். ஆனால் காலத்துக்கும், சந்தர்ப்பத்திற்கும் ஏற்பத் தங்களை மாற்றிக்கொள்வதில் வசதியுள்ளவர்கள் திருவை விடத் துரித கதியில் இருப்பதை அந்தக்கணமே நிரூபித்தார் ஜமீன்தார். அவர் அளவுக்கதிகமாகவிட்டுக்கொடுத்துத் தணிந்து போவது திருவுக்கே ஆச்சரியத்தை அளித்தது. தான் அதிகப்படிப் பற்றவன், ஒழுக்கத்தை நம்பாதவன், பக்தி சிரத்தைகளைப் புறக்கணிப்பவன், இருந்தும் தன்னைவிட நல்லவர்கள் தனக்கு மதிப்பளிப்பது அவனை வியப்பில் ஆழ்த்தியது. ஒரு கடவுளை இல்லை என்று எழுதியும், பேசியும் வந்த அவன் இப்போது உலகத்தில் மூன்று கடவுள்கள் இருக்கிறார்களோ என்று கூட எண்ணத் தொடங்கினான். பணம் பதவி என்ற இரண்டு புதிய கடவுள்களோடு பக்தர்கள் நம்பிய பழைய கடவுளும் செல்வாக்கு அதிகமில்லாமல் மங்கலாக இருக்

ஹீரோ என்று அவனுக்குத் தோன்றியது. பணமும் அதிகாரமும் — அதாவது பணத்தால் வருகிற அதிகாரமும், அதிகாரத்தால் வருகிற பணமும் — இவை இரண்டுமேயற்று வெறும் நம்பிக்கையை மட்டுமே பொறுத்திருக்கிற பழைய கடவுளை மெல்ல மெல்ல பதவியிறக்கம் செய்து கொண்டிருப்பதாய் அவனுக்கே நினைக்கத் தோன்றியது. பணமும், பதவியும் அதிகாரமும் உள்ளவன் சமூகவிரோதியாயிருந்தால்கூட மற்றவர்கள் அவனை மன்னித்து மதிக்கத் தயாராயிருந்தார்கள். பணமும், அதிகாரமும், பதவியுமில்லாதவன் எத்தனை பெரிய ஒழுக்க சீலனாகவும் பொது நல ஊழியனாகவும் இருந்தாலும் அவனை மக்கள் பொருட்படுத்தக் கூடத் தயாராயில்லை. அதிகாரத்துக்கு அஞ்சினார்கள். பணத்தைப் பக்திசெய்தார்கள். பயபக்தி இந்த ரீதியில் தான் இருந்தது. எழிலிருப்பைச் சேர்ந்த அவனுடைய சட்டைத் தோழர்கள் அவனுடைய அந்தரங்கத்தைப் புரிந்து கொள்ளாமல், ''அண்ணன் உள் பட்டணத்துக்காரங்க வரவேற்பை ஏற்றுக் கொள்ளக் கூடாது'' — என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். அவனோ உள்பட்டணத்து மக்களும் ஜமீன்தாரும் தன்னை வரவேற்று வணங்கிப் பணிவதன் மூலம் தன் மரியாதையை உயர்த்திக் கொள்ள முயன்று கொண்டிருந்தான். வரவேற்பு என்று உள் பட்டணத்துக்காரர்கள் சொன்னாலும்சொன்னார்கள், அதை ஒரு சாக்காக வைத்துக் கொண்டு அவன் தன் ஆட்களை விட்டே எல்லா ஏற்பாடுகளையும் தடபுடலாகச் செய்யச் சொன்னான். அமர்க்களப்படுத்தினான்.

அங்கே எழிலிருப்புத் தேரடியிலிருந்து உள்பட்டணம் அரண்மனை வாசல் வரை முப்பது இடங்களில் அலங்கார வளைவுகள் போட ஏற்பாடு செய்யப்பட்டது. 'பக்தன் மனங்கவர்ந்த அமைச்சரே வருக வருக!!!' எழிலிருப்புத் தந்த ஏந்தலே வருக வருக! என்பது போல் வாசகங்கள் அந்த வளைவு



களை 'அணிசெய்'தன. வாலிப வயதில் வாய் கூசாமல் தன்னை 'பாஸ்டர்ட்' என்று திட்டிய அதே சின்னக் கிருஷ்ணனிடமா இத்தனை பணிவும், விநயமும், அடக்கமும் வந்திருக்கின்றன என்பதைத் திருவினால் நம்பவே முடியவில்லை. சின்னக்கிருஷ்ணனிடம் மாறுதலும் வளர்ச்சியும் தெரிந்தன. தன்னைப் பொறுத்துச் சின்னக். கிருஷ்ணனிடம் ஏற்பட்டிருந்த அதே மாறுதல் அவனைப் பொறுத்துத் தன்னிடம் ஏற்படவில்லை என்பதும் திருவுக்குப் புரிந்தது. ஜமீன்

# அடுத்த வாரம்

- அ. தி. மு. க. வினர் சொத்துக் கணக்கைக் காட்ட எம். ஜி. ஆர். ஏன் உத்தரவிடவில்லை?
- ஆட்சியையும், கட்சியையும் ஆட்டிவைப்பவர் யார்? யார்?
- அ. தி. மு. க. வில் உள்ள சாராய சாம்ராஜ்யத்தை ஒழிப்பது எப்படி?
- 1977—80 எம். ஜி. ஆர். ஆட்சி 1980—84 எம். ஜி. ஆர். ஆட்சி — என்ன வித்தியாசங்கள்?
- இதுவரை வெளிவராத பல பரபரப்பான தகவல்களை நமது நிருபருக்குத் தந்த எட்டு மணி நேர பேட்டியில் எஸ். டி. சோமசுந்தரம் வெளியிடுகிறார்!

## எஸ்.டி.எஸ்ஸுடன்



## எட்டு மணி நேரம்!

---

ரூருக்கு உடலில் மூப்பு வந்ததோடு மனமும் மூத்துக் கனிந்திருந்தது. அவனுக்கோ உடல் மட்டுமே மூத்து முற்றியிருந்தது. தன் ஆட்களை ஏவிவிட்டு உள்பட்டண வரவேற்பில் வாண வேடிக்கை பட்டாசு எல்லாம் தடபுடல் பட வேண்டும் என்று ஏற்பாடு செய்தான்.

சின்னஉடையாரிடமும் சிலர் மந்திரி திருமலைராசனுக்கு உள்பட்டணத்தில் வரவேற்புத் தருவதை ஆட்சேபித்தார்கள். தேர்தலில் அவருக்கு ஆதரவாகவும் திருமலைக்கு எதிராகவும் வேலை செய்த திருமலையின் மைத்துனனே கடுமையாக எதிர்த்தான்: ''ஒழுக்கங்கெட்ட வங்சனுக்கு எல்லாம் வரவேற்பு ஒரு கேடா, அதிலே பரம்பரைப் பெரிய மனுஷரான நீங்க வேற போய்க் கைகட்டி நிற்சணும்கிறது எனக்கு அறவே பிடிக்கல்லீங்க! நாம எலெக்ஷன்லே தோத்துப் போனாலும் நமக்கு ஒரு கட்சி இருக்கே?''

''அதெல்லாம் சரிதாண்ப்பா! ஆனா இதிலே அரசியலோ கட்சியோ வேண்டாம்னு பார்க்கிறேன். எந்தக் கட்சியானால் என்ன? ஏதோ இந்த ஊர்க்காரன் ஒருத்தன் ஜெயிச்சு மந்திரியாகி வந்திருக்கான். இதைப் பாராட்டறதுலே தப்பு ஒண்ணுமில்லே''— என்றார் ஜமீன்தார்.

''நீங்க பெருந்தன்மை காட்டி மதிக்கிறதுக்கு இந்த ஆள் பாத்திரமில்லே. டீ. பி. யிலே பொம்பளை விவகாரத்திலே சிக்கி இரசாபாசமாகிப் போலீஸ்காரனை அறைஞ்சப்ப அது பெரிய விவகாரம் ஆகாமக் காப்பாத்தினீங்க. இன்னும் எத்தினியோ செஞ்சீங்க. அதுக்கப்புறமும் எலெக்ஷன் மீட்டிங்கிலே எல்லாம் உங்களையும் உங்க குடும்பத்தையும் பத்தி இந்த ஆளு தாறுமாறாத்தான் பேசினாரு'' —

''இருக்கட்டுமே! எதிரி பெருந்தன்மையா நடந்துக்கல்லேன்னு நாமும் பெருந்தன்மை யில்லாமே நடந்துக்கணுமா, என்ன?''—

தன்னைச் சார்ந்தவர்களும், தன் கட்சிக்காரர்களும் எழுப்பிய ஆட்சேபணைகளை எல்லாம் பொருட்படுத்தாமல் ஜமீன்தாரும் அவர் துணைவியும் முன்நின்று ஏற்பாடு செய்தவர்களுக்கு உதவியாக உள்பட்டணத்து அரண்மனை வாயிலில் அந்த வரவேற்பைப் பிரமாதமாக நடத்தினார்கள். பெரிய தட்டு நிறையப் பழங்களை நிரப்பி அவனிடம் அதைக் கொடுத்து வரவேற்றார், அவர். ஊரே அதிசயித்தது.

''சின்ன வயசிலே என்னென்னவோ விரோதம் எல்லாம் இருந்திருக்கலாம். அது பெரிசில்லே! இப்பப் பாருங்க... யாரிடத்திலே தோத்துப் போனாரோ அந்த ஆளுக்கே அரண்மனை வாசல்லே வரவேற்புக் கொடுக்கிறாரு... 'கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே — சங்கு சுட்டாலும் வெண்மை தரும்'னு தெரியாமலா பாடி வச்சான்? பெரிய மனுஷன் பெரிய மனுஷன்தான்''— என்று ஊரார் பேசிக் கொண்டார்கள். ஆனால் திருவின் கட்சியைச் சேர்ந்தவர்கள் வேறொரு புரளியைக் கிளப்பிக் கொண்டிருந்தார்கள். ''தோற்று நொடித்துப் போன ஜமீன்தார் ஊரில் மலையடிவாரத்தில் நூறு ஏக்கர் நிலப்பரப்பில் ஒரு பெரிய சிமெண்ட் தொழிற்சாலை தொடங்கப் போகிறார். புதிய தொழில் வளர்ச்சி மந்திரியாகிய திருவின் தயவு அதற்குத் தேவைப்படும் என்று கருதி இப்போதே அவனைப் பாராட்டி வரவேற்று இப்படி வளைத்துப் போடுகிறார். சோழியன் குடுமி சும்மாவா ஆடும்?'' — திருவே இந்தப் புரளி பொய்யென்பதை அறிவான். ஆனாலும் மறுக்கவில்லை. ஜமீன் குடும்பத்தின் நற்பெயரைக் காப்பாற்றுவது தன் கடமையில்லை என்று விட்டுவிட்டான். உள்பட்டணத்து வரவேற்புக்குப் பதிலளித்துப் பேசுகையில் திரு மீண்டும் பொடிவைத்தே பேசினான். ''கண்கொள்ளாக் காட்சியை — என்றுமே கண்டிருக்க முடியாத விநோதக் காட்சியை இந்த ஊர் இன்று காண்கிறது. ஊர் பேர் தெரியாத அநாதை

யான இந்த ஏழைத் திருமலைராசன் தேர்தலிலே வெற்றிவாகை சூடி அமைச்சனாகவும் பதவி ஏற்று வந்திராத பட்சத்தில் செல்வச் சீமான்கள் நிறைந்த இந்த உள் பட்டணம் இப்படி வரவேற்க முன் வந்திருக்குமா? இத்தனை பெருந்தலைகள் பயபக்தியோடு பழத்தட்டுக்களைக் கைவலிக்கச் சுமந்து எதிர்கொண்டு வந்திருப்பார்களா? அரண்மனைகளின் வாயில்கள் இப்படி அகலத் திறந்திருக்குமா? கோட்டைக்குள்ளே தான் நுழைய விட்டிருப்பார்களா? அந்தக் கோட்டையை நாங்கள் பிடித்திராவிட்டால் இந்தக் கோட்டைக்குள் இத்தனை மரியாதை எங்களுக்குக் கிடைத்திருக்குமா?'' —

இப்படி அவன் பேச்சைத் தொடங்கியதும் சின்ன உடையார் மனம் வருந்தினார். ஒருவித உள்நோக்கமும் இல்லாமல் தான் காட்டிய பெருந்தன்மையை அவனும் அவனது கட்சி ஆட்களும் இப்படிக்கொச்சைப் படுத்தியது அவருக்குப் பிடிக்கவில்லை. தான் சிமெண்ட் தொழிற்சாலைக்காகத்தான் இதை எல்லாம் செய்வதாக ஏற்கெனவே திருவின் கட்சி ஆட்கள் பரப்பியிருந்த புரளி வேறு அவர் காது வரை எட்டியிருந்தது. 'மன்னரும் ராணியும் எதிர் கொண்டு வரவேற்கா விட்டால் நான் உள் பட்டணத்து வரவேற்பிலேயே கலந்து கொள்ளமாட்டேன்'—என்று அவன் முரண்டு பிடித்த காரணத்தால்தான் ஒதுங்கி நின்று ஊராருக்குத் தர்ம சங்கடமாகி விடக் கூடாதே என்றுதான் சின்ன உடையார் இதில் கீழ் இறங்கி வந்து வேலை செய்தார். தமது பண்பு தவறாக வியாக்கியானம் செய்யப்படுவதைப் பல்லைக் கடித்தபடி பொறுத்துக் கொண்டார் அவர். அற்பர்களிடம் பெருந்தன்மை காட்டுவது கூட ஆபத்தானது என்று இன்று அவருக்கு மெல்ல மெல்ல உறைத்தது. பெருந்தன்மையைப் புரிந்து கொள்ள முடியாத கூட்டத்துக்கு நடுவே பெருந்தன்மையாக இருப்பதே தவறுதானோ என்றும்தோன்றியது அவருக்கு.

திரு பேசத் தொடங்கிய சிறிது நேரத்துக்கெல்லாம் சின்ன உடையாரும், ராணியும் கூட்டத்திலிருந்து மெதுவாக எழுந்து வெளியேறிஅரண்மனைக்குள்ளேபோய்விட்டார்கள்.

---

**குரங்கு சிரித்தால்...**

குரங்குக்கு பயம் வந்து விட்டால் மட்டுமே சிரிக்குமாம். இதை உலக வன விலங்கு அமைப்பின் அறிக்கை ஒன்று கூறுகிறது.

தகவல்: தேனி. எஸ். மாரியப்பன்.




அதை அவர்கள் அப்படிச் செய்திராவிடினும் அது ஒரு வாக் அவுட் — மாதிரித்தான் இருந்தது. சின்ன உடையார் வெளியேறியதும், அவர் கட்சிக்காரர்களும், வேறு பலரும் கூட வெளியேறி விட்டார்கள். கடைசியில் கூட்டத்தில் மீதமிருந்தது திருவும் அவன் ஆதரவாளர்களும்தான். தன்னைப் பாராட்டியோ புகழ்ந்தோ கூட அவன் பேச வேண்டுமென்று சின்ன உடையார் எதிர்பார்க்கவில்லை. உபசார வார்த்தைகளைக் கூட அவர் விரும்பியிருக்கவில்லை. ஆனால் தன்னையும், தன்னைச் சேர்ந்தவர்களையும் ஏதோ 'காரியம் ஆக வேண்டுமென்றால் கழுதையின் காலைக் கூடப்பிடிப்பார்கள்' — என்பது போன்றதொரு தொனியில் அவன் சித்தரிக்க முயன்றது அவருக்கு உள்ளூறத் தைத்து வேதனை உண்டாக்கி விட்டது. அதன்பின் அந்தக் கூட்டம் முடிகிற வரை அவர் அரண்மனையிலிருந்து வெளியே வரவே இல்லை திருவும் கூட்டம் முடிந்தவுடன் அவரிடம் போய்ச் சொல்லி விடை பெற்றுப் போகவில்லை. சின்ன உடையாரைத் தந்திரமாகக் கூட்டத்திற்கு வரவழைத்து அவமானப்படுத்தி விட்டோம் என்ற ஆணவமானதொரு திருப்தியே அவனுள் நிரம்பியிருந்தது. உள்பட்டணத்துப் பெரிய மனிதர்கள் பலர் மறுநாள் காலையில் முதல் வேலையாக ஜமீன்தாரைப் பார்த்து, ''நீங்க தான் பெரிய மனசு பண்ணி மன்னிக்கணும்! அவருக்குப் பேசத் தெரிஞ்ச லட்சணம் அவ்வளவுதாங்க'' — என்று வருத்தப் பட்டார்கள். சின்ன உடையார் அதற்குப் பதிலே சொல்லவில்லை. சிரித்தபடியே காலைப் பத்திரிகைகளை எல்லாம் எடுத்து வந்தவர்களிடம் நீட்டினார்.

'தொழில் வளர்ச்சி அமைச்சருக்குச் சொந்த ஊர் வரவேற்பு. அவரிடம் தோற்ற ஜமீன்தாரே வரவேற்பை முன்நின்று நடத்தினார்' என்று படங்களுடன் செய்திகள் வெளியாகி இருந்தன. சின்ன உடையார் சார்ந்திருந்த கட்சிப் பத்திரிகை ஒன்று மட்டும், 'மந்திரியின் பண்பற்ற பேச்சைக் கேட்டு முன்னாள் அமைச்சர் வெளி நடப்பு' — என்று வெளியிட்டிருந்தது. அதே சமயத்தில் திருவின் கட்சியைச் சேர்ந்த இளைஞர்கள், ''ஜமீன்தாருக்கு நல்ல சூடு குடுத்தீங்க. நேத்து உங்க பேச்சு டாப்பாயிருந்திச்சு அண்ணே!'' — என்று அவனைப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள். சின்னஉடையாரை எதிர்க்கும் அவனைக் கொம்பு சீவி விடுவது அவர்களுக்குச் சுலபமாயிருந்தது. சின்னஉடையாரோ தான் வெளி நடப்புச் செய்ததாக நியூஸ் போட்டிருந்த தம் கட்சிப் பத்திரிகைக்கு, ''நான் வெளிநடப்பு எதுவும் செய்யவில்லை. தவிர்க்க முடியாத வேறு வேலை இருந்ததால் நானும் என் மனைவியும் பாதிக் கூட்டத்தில் வெளியேற நேர்ந்தது'' — என்று விளக்கம் எழுதி அனுப்பிப் பிரசுரிக்கச் செய்தார்.

அந்த விளக்கத்தை அவர் எழுதி வெளியிட்டது வேண்டியவர்களுக்கும் அவர் கட்சிக்காரர்களுக்கும் பிடிக்கவில்லை. ''ஏன் இப்படி மறுத்தீங்க? 'வெளி நடப்பு'ன்னு போட்டிருந்த நியூஸ் சரிதானே?'' — என்று சின்ன

உடையாரிடம் போய்க் கேட்டார்கள். அதற்கு அவர்,

"நான் பதவியை இழந்திருக்கலாம்! சொத்துச் சுகங்களை இழந்திருக்கலாம். ஆனால் பண்பாட்டை இழந்து விட முடியாது. அரண்மனை வாசலிலே வரவேற்புன்னு போட்டு நானே வெளிநடப்புச் செய்தேன்னும் நியூஸ் போட்டா ஒருத்தரைக் கூப்பிட்டு அவமானப் படுத்தின மாதிரியில்லே ஆயிடும்?" — என்று அவர்களைப் பதிலுக்குக் கேட்டார். அவர்களால் பதில் சொல்ல முடியவில்லை. இத்தனை பண்புள்ளவர்கள் இந்நாட்டு அரசியலில் இனி மீண்டும் வென்று முன்னுக்கு வருவது முடியாத காரியமாயிருக்குமோ என்கிற பயம் தான் அவர்களுக்கு அப்போது ஏற்பட்டது. பண்பாடும்; கைசுத்தமும் உள்ள பலர் அரசியலிருந்தே ஒதுங்க ஆரம்பித்து விடுவார்கள் என்பதற்கான அடையாளம் தெரிந்தது. மறுவாரமே திருவின் கட்சிப் பத்திரிகை ஒன்றில், "சிமெண்ட் தொழிற்சாலைக்காகக் காக்காய்ப் பிடித்த ஜமீன்தாரின் தந்திரம் பலிக்கவில்லை. கொள்கை மறவர் திரு கொடுத்த சூடு" — என்று இந்த விவரம் ஒரு கட்டுரையாகவே வந்து விட்டது. "சிமெண்ட் தொழிற்சாலை என்பது வெறும் கற்பனை. அம்மாதிரி எந்த உதவியையும் ஜமீன்தார் என்னிடம் நாடவில்லை" — என்று திருவே இதை மறுத்து அறிக்கை விடாததிலிருந்து அவனே ஒரு பெருமைக்காக இந்தப் பொய்யைப் பரப்பியிருக்கக் கூடும் என்று சின்ன உடையார் புரிந்து கொண்டார்.

'பொய்யுடை ஒருவன் சொல் வன்மையினால் மெய்போலும்மே மெய் போலும்மே' —என்பது நிரூபணமாகிக் கொண்டிருந்தது. பணமின்றி அரசியல் நடக்காது என்பதைப் புரிந்து கொண்ட திரு தொழிலதிபர்களிடமும், பணக்காரர்களிடமும் தாராளமாகக் கைநீட்டி வாங்கினான். ஆனால் மேடையில் பேசும் போது மட்டும், "முந்திய ஆட்சியில் இருந்தது போல் எங்கள் ஆட்சியில் லஞ்ச ஊழல் இல்லை! இது ஏழை எளியவர்களின் ஆட்சி! ஏழைகளின் சிரிப்பில் இறைவனைக் காண விரும்பும் ஆட்சி" — என்று முழங்கினான். ஓர் எதிர்க்கட்சிப் பத்திரிகை இதைக் குறும்புத்தனமாக வியாக்கியானம் செய்தது.

"முந்திய ஆட்சியில் இருந்தது போல் எங்கள் ஆட்சியில் லஞ்சம் இல்லை என அமைச்சர் திரு பேசுவதில் ஓர் அர்த்தம் இருக்கத்தான் இருக்கிறது. உண்மையில் முந்திய ஆட்சியில் இருந்ததைவிட லஞ்ச ஊழல் இப்போது பல மடங்கு அதிகரித்து ரேட்கள் மிகவும் அதிகமாகிவிட்டன. அதைக் குறிப்பாக உணர்த்துவதற்காகவே அமைச்சர் அடிக்கடி, "முந்திய ஆட்சியில் இருந்தது போல் எங்கள் ஆட்சியில் லஞ்ச ஊழல் இல்லை" — என்று சொல்கிறார். இந்த சமிக்ஞையை மக்கள் நன்கு புரிந்து கொள்ள வேண்டும் என்று கிண்டலாக எழுதிவிட்டது. இதைக் கண்டு திருவுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. அந்தப் பத்திரிகையை எப்படிப் பழி வாங்குவது என்று உடனே அவன் திட்டமிடத் தொடங்கினான்.

(தொடரும்)

# கல்லிடைக்குறிச்சி லக்ஷ்மி வராஹர்

ஆபோகி ராகத்தில் அமைந்தஸ்ரீலக்ஷ்மி வராஹம் பஜே என்ற கிருதியைக் கேட்கும் போதெல்லாம் அந்த அபூர்வமான மூர்த்தியைத் தரிசனம் செய்ய வேண்டும் என்ற ஆவல் உண்டாகும். இந்தக் கிருதியில் புகழப் பட்டிருக்கும் லக்ஷ்மீ வராஹ ஸ்வாமி தாம்ரபர்ணீ தீரத்திலுறைபவர் என்றும் கல்லிடைக்குறிச்சி நகரத்தில் கோவில் கொண்டவர் என்றும் கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தேன்.

திருநெல்வேலியிலிருந்து கல்லிடைக்குறிச்சி போகும் போது நாதஸ்வர இசை காற்றில் மிதந்து வருவது போல் தோன்றிற்று. காருகுறிச்சி வழியாகப் போகவேண்டும்!

பொதிகை மலைச்சாரலில் தண்பொருநை நதிக் கரையில் அமைந்துள்ள பல ஊர்களில் கல்லிடைக்குறிச்சி பிரசித்தமானது. நதியின் இக்கரையும் அக்கரையுமாய் கல்லிடைக் குறிச்சி அம்பாசமுத்திரம் அமைந்திருக்கிறது. மணிமுத்தாறும், தண்பொருநையும்இணைந்து வளம் கொழிக்கச் செய்கின்ற பூமி. மெல்லிய பூங்காற்று. இதமான தண்மை. மலைப் பிரதேசமான குறிஞ்சி நிலத்தின் வளங்களும், மருத நிலத்துக்குரிய செழுமையும் சேர்ந்த பிரதேசம். செல்வச் செழிப்பின் நிறைவும், பண்பாட்டின் மன நிறைவும் சேர்ந்த மக்கள். கல்லிடைக்குறிச்சிக்குக் கல்யாணபுரி என்ற பெயர் பொருத்தமாகவே இருக்கிறது.

மாலை இருள் சூழ்ந்து வரும் நேரம். கோவிலை அடைகிறோம். ஆடி மாதப் பிறப்பாதலால் புறப்பாட்டுக்காக கருடாழ்வாரை அலங்காரம் செய்து கொண்டிருக்கிறார்கள். தட்டுத் தட்டாக மாலைகள், நந்தியாவட்டையும் செவ்வரளியும் வைத்துத்தொடுத்துப் புதிதாக இருக்கின்றன. மல்லிகைச்சரங்கள், பிரும்மாண்டமான கட்டு மாலை. ஒரு ஊரின் வளம் புஷ்பங்களைப் பார்த்தாலே தெரியும். திருத்துழாய் மணம் கமழ்கிறது.

கருடாழ்வார் வைகுந்த நாதனைத் தோளில் சுமந்து அவருடைய திருவடிகளைத் தமது கைகளால் தாங்குவதற்குத் தயாராக நீட்டியவாறு சித்தமாக இருக்கிறார். ஸ்ரீசூர்ணத்துடன் நெற்றியில் திருமண் துலங்குகிறது. பெருமாளை இன்னும் எழுந்தருளப்பண்ணவில்லை. நீட்டிய கரத்தின் மீது நின்று ஒருவர் அலங்காரம் செய்கிறார். பகவானைத் தாங்குபவர் அவருடைய அடியாரைத் தாங்க மாட்டாரா என்ன?

மூல மூர்த்தியை - ஸ்ரீலக்ஷ்மீபதியைத் தரிசிக்க உள்ளே செல்கிறோம். சந்நிதியில் நிறையக் குத்து விளக்குகள் சுடர் விடுகின்றன. எல்லாம் பிரார்த்தனை செய்து கொண்டோர் வைத்த விளக்குகள். விளக்கெரிக்க எண்ணெயோ பணமோ கொடுத்து வருகிறார்கள்.

''சங்கர ப்ரியகர குபேர ப்ரதிஷ்டிதம்
சங்க சக்ர தரம் க்ருபாகரம்.''



X கருட சேவை - கருட வாகனம் X



லக்ஷ்மிபதி ஆதிவராஹனுர் கோவில் மூலஸ்தானம்



✖ ஆதிவராஹர் கோவில் உற்சவர்

சங்கரனுக்குப் பிரியமான குபேரனுல் பிரதிஷ்டை பண்ணப் பட்டதாக ஐதிகம். கருணை வடிவான அந்த மூர்த்தியின் எதிரே நிற்கிறோம். மடியில் மகாலக்ஷ்மி, வராஹ முகம், சங்கு சக்ரம், கவசமணிந்த திருமேனி. நாம் கொண்டு சென்ற பச்சைப் பூச்சரத்தைத் திருமாலின் மேனியில் அணிவித்துத் தீபா ராதனை செய்கிறார்.

பிரளய காலத்தில் பூமி வெள்ளத்தில் மூழ்கி விட்டது. சிருஷ்டித் தொழில் நடக்க வேண்டுமே! பிரும்ம தேவர் தன் மகனை சுவாயம்புவ மனுவும் அவர் மனைவி சதரூபையும் எங்கே வாழ்வார்கள் என்று யோசிக்கும் போது அவனுடைய நாசியிலிருந்து ஒரு வராகக்குட்டி குதித்தது. பார்த்துக் கொண்டிருக்கும் போதே கிடுகிடு வென்று வளர்ந்தது. விண் முகடுகளைக் கடந்து வளர்ந்து பயங்கரமாக உறுமிற்று. மரீசி முதலிய முனிவர்கள் பிரும்மதேவர், ஸனகாதி முனிவர்கள் எல்லோரும் முதலில் திகைத்தார்கள். பிறகு இவர் ஸ்ரீமந்நாரா யணனே என்று தெளிந்தார்கள். பின்னர் தோத்திரம் செய்து துதித்தார்கள்.

அந்த வராகம் பிரளய நீரில் பாய்ந்தது. இன்னொரு பிரளயம் வந்தது போல் நீர் கொந்தளிக்க மிக ஆழத்தில் சென்று தேடி பூமிதேவியைத் தூக்கிக் கொண்டு வந்தார் வராகமூர்த்தி. ஹிரண்யாக்ஷன் என்ற அசுரன் அவரைத் தடுத்துப் போரிட்டான். அவனைக் கொன்று பூமியை நீரிலிருந்து வெளியே கொண்டு வந்தார் பகவான். மனித குலத்தைத் தாங்கவும் வாழ வைக்க வும் நிலம் தோன்றி விட்டது.

வராக மூர்த்தி பராக்ரமத்தோடு பூமியை தூக்கிக் கொண்டு ஹிரண்யாக்ஷனை வதம் செய்த உக்கிர மூர்த்தியாக பயங்கரத்தோற் றத்தோடு பிரளய நீரிலிருந்து எழும்பிய நிலையில் அவரைப் பூவராகப் பெருமான் என்று கூறுகிறோம்.

**ஆனந்தி**

லக்ஷ்மி தேவியை அணைத்துக்கொண்டு சாந்த மூர்த்தியாக விளங்கும் போது ஸ்ரீலக்ஷ்மி வராஹர் என்று வழிபடுகிறோம். ''எந்த அவதாரத்திலும் பகவான் லக்ஷ்மி யுடன் அவதரிக்கவில்லை. லக்ஷ்மி தேவியைத் தேடித் தான் அடைந்தார். ஏற்கெனவே கல்யாண குணங்களை உடைய பெருமான் மகாலக்ஷ்மியைக் கல்யாணம் செய்து கொண்ட உடனே அவனுடைய கல்யாண குணங்களையெல்லாம் அடைந்து பரம மங்கள ரூபியாக விளங்குகிறார். பகவான் லக்ஷ்மி தேவியை மடியில் வைத்துக்கொண் டிருக்கும் போது தன் பராக்கிரமத்தை வெளிக்காட்டாமல், உக்கிரம் தணிந்து அனுக்ரஹ மூர்த்தியாகி அருள் பொழிகிறார். தாயார் கருணையின் முழு வடிவம்.

''மகாலக்ஷ்மிக்குப்பரபரப்புத்தான்குணம். பகவான் ஸ்திரமானவர். லக்ஷ்மிதேவி திரு மாலின் மார்பில் வாசம் செய்யும் போது சாந்தமடைகிறாள். பகவான் திருமகள் மடியில் இருக்கும் போது சாந்த குண சம்பன்னனாகிறார்'' என்று விளக்கம் கூறினார் திரு. மூக்கூர் ஸ்ரீநிவாஸ வரதாச்சாரியார். காஞ்சி பரமாச்சாரியாளின் பரிபூரண அனுக்ரகத்தைப் பெற்று சென்னை மாநகரில் கடற்கரையை ஒட்டி அஷ்டலக்ஷ்மிகோவிலைக் கட்டத் துணை நின்ற பெரியார் இவர்.

அருளின் முழு வடிவமாக லக்ஷ்மி வராஹ ஸ்வாமி வீற்றிருக்கும் ஊர் மங்களாலயமாக வும், கல்யாணபுரியாகவும் செழித்து ஓங்கக் கேட்பானேன்!

நீலமேகநிற ச்யாமள காத்ரமான திரு மேனியை ஸ்ரீலக்ஷ்மி ஸஹிதம் கண்குளிரத் தரிசனம் செய்து கொண்டு வலமாக வந்து மத்தியில் உள்ள மண்டபத்தில் உற்சவ மூர்த்திகளைத் தரிசித்துக் கொள்கிறோம். ஸ்ரீதேவி பூதேவி சமேதராகக் காட்சிதருகிறார் வைகுண்டநாதன். ஸ்ரீகதர்சனும்வாரும் அருகில் இருக்கிறார்.

இரவு 9 மணி. வீதியெல்லாம் நீர் தெளித்துக் கோலங்கள் போடுகிறார்கள். வீட்டு வாயில்களில், தேங்காய் பழம் ஏந்தி

அடியார்கள் நிற்கிறார்கள். உள்ளூர் வித்வான் நாதஸ்வர இசையைப் பொழிகிறார். ஹேமவதி ராகம் வாசித்து 'ஸ்ரீ காந்திமதீம்' என்று கிருதியை எடுக்கிறார். சிவ விஷ்ணு பேதம் கிடையாது என்பதற்கு சங்கர நாராயணர் கோவில் சாட்சியாக இருக்கிறது. இந்தக் கோவிலிலேயே சைவ, வைஷ்ணவ ஒற்றுமையைக் காணலாம். தூண்களில் சிவலிங்க வடிவத்தையும், விமானத்தில் தக்ஷிணாமூர்த்தி, விநாயகர் முருகன் வடிவங்களையும் காண முடிகிறது.

குடமுருட்டி அணை என்று இன்று வழங்கப்படும் மூன்று நதிகள் சேருமிடத்தில் ஒரு குடம் உருண்டு வந்ததாம். அதைப்பார்த்தவர்கள் தானாக உருண்டு செல்லும் இந்தக் குடம் எங்கே நிற்கிறதென்று பார்க்க ஆவலுடன் பின் தொடர்ந்து வந்தார்கள். அது உருளாமல் நின்றதும் திறந்து பார்த்த போது எம்பெருமானின் திவ்யஉருவத்தைக் கண்டு ஒரு ஜோசியரிடம் சென்று கேட்டார்கள். அவர் பிரச்னம் வைத்துப்பார்த்து 'குடம் தங்கிய இடத்தில் ஸ்ரீலக்ஷ்மியை மடியில் வைத்துக் கொண்டுள்ள கோலத்தில் ஆதி வராகப் பெருமாளைப் பிரதிஷ்டை பண்ணச் சொன்னார். குபேரனால் பூஜிக்கப்பட்ட சக்ரதாரியே குடத்தில் உருண்டு வந்ததாகவும், இன்றும் நள்ளிரவில் குபேரன் வந்து பூஜிப்பதாகவும் நம்புகிறார்கள்.

1948–ஆம் ஆண்டில் இந்தக் கோவிலில் கும்பாபிஷேகம் நடைபெற்றது. ஸ்ரீ லக்ஷ்மி வராஹம் என்ற கீர்த்தனை தங்கள் ஊரில் திருக்கோயில் கொண்டுள்ள லக்ஷ்மி வராஹரைக் குறித்துப் பாடப் பெற்றதற்காகப் பெருமையும் பூரிப்பும் அடையும் இவ்வூர் மக்களின் முயற்சியால் மறுபடியும் கோவிலைப் புதுப்பித்துக் கும்பாபிஷேகம் செய்ய ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

கல்லடியன் அணைக்கட்டில் உள்ள தாம்ரபர்ணி, மணிமுத்தாறு சங்கமத்தை வராக தீர்த்தம் என்று அழைக்கிறார்கள். புரட்டாசி மாதம் சனிக்கிழமைகளில் இங்கே நீராடுவது ரொம்ப விசேஷம்.

பகவான் எழுந்தருளி விட்டார். கருடாழ்வார் மீது எழுந்தருளியிருக்கும் பகவான் வேகமாக வருகிறார். மாலைகள் ஜிலுஜிலு வென்று குலுங்க, குடையில் தொங்கும் வண்ணக் குஞ்சலங்கள் அசைந்தாட, ஆபரணங்கள் விளக்கொளியில் பளபளக்க, நெற்றியில் திருமண் துலங்க பக்தர்களுக்கு அருள் பாலிக்கத் தேடி வருகிறார். குடத்தில் உருண்டு வந்தவரல்லவா? சக்கரம் பூட்டிய வண்டியை வேகமாகத் தள்ளிக் கொண்டு வரும் போது பறந்து வருவது போலவே தோன்றுகிறது. கருடாழ்வாரின் முகமும், ஸ்வாமி முகமும் தான் தெரிகிறது. அவ்வளவு மாலைகள்.

''இது என்ன பிரமாதம்? முன்னேயெல்லாம் மதுரையிலிருந்து மாதுளை முத்துக்களைக் கோத்து மாலை கட்டி வரும். என்னமாய் இருக்கும் தெரியுமா? ரத்தின மணிகளை வைத்து இழைத்த மாதிரி இருக்கும்'' என்று திருமதி லலிதா கூறினார். இதற்குமேல் பூமாலைகளை எப்படிச் சாத்த முடியும் என்று வியக்கிறோம். அன்பர்கள் ஆங்காங்கே நிறுத்தித் தீபாராதனை செய்து வரவேற்கிறார்கள். திருத்துழாய் வழங்கிக் கொண்டே முன் செல்கிறார் கண்கண்ட தெய்வமான வரதர்.

சிங்கார பவனியைக் காணக் காணப் போதவில்லை. மீண்டும் மீண்டும் அவரை முந்திக் கொண்டு போய் நின்று கொண்டு, அவர் அசைந்தாடி வரும் அழகை அநுபவிக்கிறோம்!

# இப்போது... சருமத் தொல்லைகளை அகற்றிடுக ஆரோக்கியமும் இயற்கைப் பொலிவும் பெற்றிடுக.

## Godrej நிமின்

### தூய வேப்பெண்ணெயின் இயற்கை குணம் கொண்ட சோப்

நீம், மார்கோஸா எனப்படும் வேப்பிலை சரும தொல்லைகளை விரட்ட இயற்கை தந்த வரப்பிரசாதம். தொடர்ந்து வேப்பிலை உபயோகித்தால் உங்கள் சருமம் பளபளப்பாகவும் தெளிவாகவும் விளங்கும்.

கோத்ரெஜ், தூய வேப்பெண்ணெயை நிமின் சோப்பில் கலந்துள்ளது. உங்கள் சருமத் தொல்லைகளை குளித்து ஒழிக்க ஒரு புத்துணர்ச்சியூட்டும் டாய்லெட் சோப். கோத்ரெஜ் தரும் நிமின் வெகுவாக நீடித்து நிற்கும். ஏனெனில் மற்ற வேப்பிலை சோப்புகளைப்போல கொழ கொழவென மாறுவதில்லை.



**நிமின்—உங்கள் கவனிப்புக்கிணையாக சருமத்தைக் கருத்துடன் காத்திடும்.**

CHAITRA-B G 230 TAM

என்னதான் சொல்லுங்கள், புதுசாய் பொறுப்பெடுத்துக் கொள்பவர்கள், கொஞ்சம் முயற்சி செய்தே தீருகிறார்கள். இந்த முறை: சிவராஜ். சாதாரணமாய் டைரக்ஷன் + நடிப்பு என்று இரண்டு விஷயங்களில் தலையை விட்டுக் கொள்பவர்கள் தவித்துப் போகிற மாதிரி இவரும் மாட்டிக்கொண்டிருக்கிறாரே என்று முதலில் யோசனையாய்த் தான் இருந்தது. மனிதர் கொஞ்சம் சாமர்த்தியமாகவே செயல்பட்டிருக்கிறார். இருந்தாலும், அது மட்டும் போதுமா?

கதையின் மைய முடிச்சு குழந்தைத்தனமானது. விளையாட்டாய்க் கட்டினாலும், தாலி கட்டியவனே புருஷன் என்கிற வாதமும் அழுத்தமாய் விழாமல், போய், போது, ஒத்துக் கொள்ளலாமா வேண்டாமா என்று மனம் குழம்புகிறது.

ராஜேஷ் கல்லூரிப் பேராசிரியர், காதல் பற்றிப் பாடமும், மாணவியோடு கனவுப் பாடலுமாய் பொழுது போகிறது. பின்னால் இன்னொருத்தனுக்கு அவள் கழுத்தைக் குனிந்து கொடுத்து விட்டு மனம் தளும்புகிற போது, 'நீ அவனுக்குத் தான் சொந்தம்; என்னை நினைத்து வருந்துவது தவறு' என்று எடுத்துச் சொல்கிற போது, குரலில் கௌரவம் இருக்கிறது. ஒருத்தனை ஆசைப்பட்டு, விதி வசத்தால் இன்னொருத்தனிடம் கழுத்தைக் கொடுத்து விட்டு அவதிப் படுகிற ரோல், விஜயசாந்திக்கு. தமிழில் ரொம்ப நாளாய்ப் பார்க்காத முகம்.

# கல்யாண கனவுகள்



அதை ஒட்டி வருகின்ற, பிரச்னைகளும் வித்தியாசமாய் இல்லாமற் போய், சவசவத்த சம்பவங்கள் — அடுத்து உயிரில்லாத சம்பவங்கள் என்று அடுக்கிக் கொண்டே போகிற போது இருக்கையில் நெளியாமல் இருக்க முடியவில்லை. ராதாரவிக்கு ஞாபகம் வைத்துக் கொள்கிற மாதிரி ஒரு பாத்திரம். வில்லன் டைப் பாத்திரம் யாருக்கு என்கிறீர்கள்? ஒய். ஜி. மகேந்திரனுக்கு! இருட்டு முழியும், இல்லுமுல்லுமாய்ப் பார்க்கிற



வெட்கமும், சொப்பனமும், ஆற்றாமையும், ஆதங்கமும் நன்றாகவே குழைந்து வருகிற முக பாவங்கள். சிரிப்புத்தான் என்னவோ பண்ணுகிறது.

சங்கர் கணேஷின் இசையில் 'அணையாத தீபமே' மட்டும் அணையாமல் நிற்கும். மற்ற மூன்று பாடல்களும்... ஊம் ஹூம், நம் வாயால் ஏன் சொல்ல வேண்டும்? நடிப்பு என்று பார்த்தால் மறக்காமல் சொல்ல வேண்டிய இரண்டு பேர் உண்டு. டைரக்டர் சிவராஜ், வி. கோபாலகிருஷ்ணன்.

அதிராத பேச்சும், விளையாட்டுத்தனமுமாய் ஒரு வளர்ந்த குழந்தையாய் சிவராஜ் சுலபமாய்ச் செய்திருக்கிறார். சில சீரியஸ் கட்டங்களில் அவர் மிரண்டு போவதை அதனாலேயே மன்னிக்கலாம்.

கண்டிப்பும், சளரும் குறையாத அப்பாவாய் வி. கோபாலகிருஷ்ணன் நன்றாகவே ஜொலித்திருக்கிறார். அவசரமாய்த் தன் பெண், ஒரு தவறான முடிவுக்குப் போய் அப்பாவி ஒருவனை விட்டுத் தாலி கட்டிக் கொண்டாள் என்று தெரிய வரும் போது அதிர்ச்சியும் கோபமுமாய் அவர் பொருமுகிற காட்சியும் சரி, பெண்ணைப் பார்ப்பதற்காக என்று வரும் அந்த வேண்டாத மாப்பிள்ளையை வாசலோடு விரட்டும் ஆத்திரம் கொப்பளிக்கும் காட்சியும் சரி, கோபாலகிருஷ்ணன் வெகு இயல்பாய்ச் செய்திருக்கிறார். சரி, பாராட்டியாயிற்று.

அப்புறம்?

சொல்வதற்கு வேறொன்றுமில்லை.

கலைந்து போகிற கலர்க் கனவுகள்.

2

**இந்த வாரம் ரஜினியும் ரஜினியைச் சார்ந்தவர்களும் —**

**வ**ரிசையாய் -பெஞ்சில் சின்னச்சின்ன மழலைமலர்கள்.

அட்டென்டென்ஸ் எடுக்கும் ஆயா—கம்—மச்சர். ஒவ்வொரு குழந்தையும் ஆஜர் சொல்லிக்கொண்டுவர ஒரே ஒரு கண்ணாடிக் குழந்தை மட்டும் பெயரைத் திருத்துகிறது. 'பீட்டர் இல்லை J.C. பீட்டர்.'

'இங்கதான் எந்தக் குழந்தைக்கும் இனிஷியல் இல்லையே. எல்லாம் அனாதைகளாயிற்றே' என்கிறது ஆயாவின் வியப்புக்குரல்.

'அனாதைக் குழந்தைகளுக்கெல்லாம் கர்த்தர்தானே அப்பா, அம்மா எல்லாம், அதனால் என் பெயர் 'J.C. பீட்டர். ஜீஸஸ் க்ரைஸ்ட் பீட்டர்'

பதிலளிக்கும் பையன் டிங்கு ஜம்மென்று பார்க்கிறவர்களைக் கவர்கிறான் இந்தக் காட்சியிலேயே.

அப்புறம் அந்தச் சின்ன முகம் (குவித்த வாய், குறும்புக் கண்கள்) தென்படும் போதெல்லாம் சிரிப்புதான்.

'நீதான் அமெரிக்கா போறியே. எனக்கென்ன வாங்கிட்டு வரப்போறே?' என்று கேட்கிற ஆயாவுக்கு இது அளிக்கும் பதில்:

'குழந்தை வளர்ப்பது எப்படிங்கற புஸ்தகம்.'

வசனம் எழுதியது டிங்கு இல்லைதான். ஆனால் அதை டெலிவர் பண்ணும்போது



# அங்கிள் ரஜினிகாந்த்

வைத்துக் கொள்ள வேண்டிய முகபாவம்? டிங்குவுடையதுதானே!

சபாஷ்டா ராஜா!

கடைசியில் அமெரிக்கா போகிறேன் பேர்வழி என்று சூட்கோட் எல்லாம் மாட்டிக் கொண்டு உற்சாகத்துடன் 'டாட்டா'வை ஆரம்பித்து, ஒவ்வொரு முகமாகப் பார்க்கப் பார்க்கக் குரல் கம்மிப் போய், கடைசியில், 'நான் போகலை', 'நான் அமெரிக்கா போகலை' என்று சொல்லி விட்டு உள்ளே ஓடுகிற விதம் இருக்கிறதே—

'அப்பாடி படம் முழுக்க முழுக்க மறுபடி அந்த 'டிங்கு' முகத்தைப் பார்க்கலாம்' என்ற ஆறுதலை உண்டுபண்ணி விடுகிறது.

அப்புறம்...

சூப்பர் ஸ்டார், குழந்தைகளுக்காக 'ரஜினி அங்கிளாக' உலா வரும் படம்.

ஏகப்பட்ட ரசிகர் கடிதங்களுக்கு இடையில் ரோஸியின் லெட்டர். 'வழக்கம்போல பதில் எழுதவா?' என்று கேட்கும் செக்ரட்டரியை 'பாட் ப்ளீஸ்' என்று கேட்டு சுயமாய் பதில் எழுதுகிற இடம் இருக்கிறது பாருங்கள்—புல்லரிக்கிறது.

அவ்வப்போது வந்து போனாலும், மனிதர், படம் முழுக்க நிறைந்திருக்கிற ஒரு கனமான உணர்வை ஏற்படுத்தி விடுகிறார்!

நிஜ வாழ்க்கையில் ரஜினி அங்கிளுக்கு இந்த ஸெண்டிமெண்டிற்கெல்லாம் நேரம் இருக்குமோ, என்னவோ, இந்தப் படத்தில் இருக்கிறது; அது அவர் இமேஜை எவரெஸ்டிற்கு ஒரு பிடி மேலேயே வளர்த்து விட்டிருக்கிறது.

அப்புறம்...

தெனாலிராம பாக்யராஜும், கிருஷ்ண தேவராய ரஜினிகாந்தும், கொட்டமடிக்கிறார்கள் இருவரும் சேர்ந்து கொண்டு.

இந்த டிராமாவுக்கு ஸ்கிரிப்டைத் தயார் செய்யுமாறு ரஜினி பாக்யராஜை வேண்ட, பாக்யராஜ் சரி என்கிறார். நிஜத்திலும் அப்படியேதானோ என்கிற சந்தேகத்தை அழுத்தமாக மனத்தில் ஊன்றி விடுகிறார்.

தாய்க் குலத்திற்காகப் பரிந்துகொண்டு அவர் ஆடும் நாடகம், அப்புறம் அயதுரான் படையெடுப்பு. தெனாக்கும் தெனாக்கும் இடையில் முஷ்டி பலப் பரிட்சை.

கொஞ்சம் அதிகமாகவே இருந்தாலும் கூட சுவாரஸ்யமான இழுப்பு. வேதனையோடு படத்தைப் பார்க்கும் அத்தனை பேருக்கும் ஒரு அசகாய ஆறுதல்.

அது என்ன வேதனை?

அடுத்த வாரம் பார்ப்போமே.

— ஜெயமன்மதன்




## வட்டமேஜை

● தங்கள் 12.8.84 இதழில் வெளியான 'நிமிடத்துக்கொரு நிறம்'—பரிசு பெற்ற கதை மிகத் தத்ரூபமாக இருந்தது. ரமேஷ் போன்ற பாத்திரங்களை நாம் நிஜ வாழ்க்கையில் தினமும் சந்திக்கிறோம்.
சென்னை—4, தே. ச. ராஜகோபாலன்.

● மாணவர் பக்கத்தில் வெளியாகியிருந்த 'சின்னச் சின்னக் கொலைகள் இரண்டு' சிறிய கதையாக இருந்தாலும் விறுவிறுப்புடன் எழுதப்பட்டிருந்தது.
அரூர், மு. மதிவாணன்.

● ''தூக்கம் வருது, தூக்கம் வருது படிக்க, படிக்கத், தூக்கம் வருது'' என்ற தலைப்பில் ஆபீசில் பணிபுரிகிறவர்கள் வேலை நேரத்தில் தூங்குகிறார்கள் என்று வாசகர்கள் எண்ணும் படி படங்களை வெளியிட்டுக் கிண்டல் செய்திருப்பதைப் படிக்கப் படிக்கத் தூக்கம் தான் வருது.
சென்னை—57, இரணியல் 'சலே'.

● ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் ஐம்பதாவது வயது நிறைவுறுவதைக் கௌரவிக்கும் வகையில் அவரது (கண்ணில் ஒற்றிக் கொள்ளக் கூடிய அளவுக்கு), அழகிய வண்ணப்படமும் காஞ்சி காமாட்சியின் பொன்தக்கட்டு உருவமும் கல்கியின் அட்டையில் கண்டு மெய்சிலிர்த்து விட்டேன். அதி அற்புதமாக இருந்தன.
சென்னை—33, எஸ். மோகன்.

● துணை ஜனாதிபதியாகப் போகும் ஆர். வி.யின் சில எழுத்துக்களும், பேச்சுக்களும் அவரது சந்தர்ப்பவாத அரசியலைக் காட்டினாலும், அப்பதவி ஏற்கும் முதல் தமிழர் என்ற முறையில் வரவேற்கலாம்.
சென்னை—5, எல். ஜெயசேகர்.

● சென்னைப் பல்கலைக் கழகம் 'மறு மதிப்பீட்டு' முறையைக் கைவிட்டதற்குப் பிராயச்சித்தமாக, மாணவர்களின் விடைத்தாள்களைச் சர்ச்சைக்கு இடமில்லாத வகையில் திருத்த வேண்டும். மாணவன் எழுதிய தகுதிக்கேற்ப 'மதிப்பெண்' கிடைத்தால் சர்ச்சை ஏன் கிளம்புகிறது?
குடியாத்தம் (வ. ஆ.) ஆர். அரிகோபி.

● எஸ். டி. எஸ். சேம் சைட் கோல் கார்ட்டூன் வளமான கற்பனை! ப(ார்த்து)டித்து விட்டுச் சிரிப்பை அடக்க வெகு நேரம் பிடித்தது.
கிருஷ்ணகிரி ஆர். பூபாலன்.

● பிளஸ் 2—ல் 83 சதம் வாங்கியுள்ள வேலூர் சித்ராவின் மேற்படிப்புக்கு உதவி தேவை என்று அவள் தாயார் குறிப்பிட்டு எழுதியது பற்றி ''எதிர்காலம் உங்கள் கையில்'' பகுதியில் படித்தோம். ரூ.250க்கு டிராஃப்ட் தங்கள் பெயருக்கு அனுப்பியுள்ளோம். இதைச் சித்ராவுக்குக் கிடைக்கச் செய்யவும்.
திருப்பூர், பாகஸ்தர்கள், யுவராஜ் இண்டர்நேஷனல்.

● 29.7.84 கல்கி இதழில் ஏழை சித்ராவின் கல்வி நிலையை விவரித்து எழுதியிருந்தீர்கள். அது எங்கள் மனத்தை மிகவும் பாதித்தது. எங்களால் முடிந்த அளவில் ரூ. 27 சேகரித்து அனுப்பியுள்ளோம். சித்ராவிடம் சேர்ப்பிக்க வேண்டுகிறோம்.
சங்கர் நகர், போஸ்டல் ரிக்ரியேஷன் கிளப்.

(மேற்படி தொகைகள் செல்வி சித்ராவுக்கு அனுப்பப்பட்டு விட்டன. —ஆசிரியர்)

● ''லயோலா கல்லூரியில் பி. ஏ. பயிலும் பார்வையற்ற மாணவர்களுக்கு வாரத்தேர்வுகளையும், இறுதித் தேர்வுகளையும் எழுதித்தருவதற்குத் தமிழ் நன்றாக எழுதத் தெரிந்தவர்கள் தேவைப்படுவதால், சேவை மனப்பான்மை கொண்ட சென்னை வாசிகள், குறிப்பாக தி. நகர், நுங்கம்பாக்கம் பகுதிகளில் வசிப்பவர்கள் கீழ்காணும் தொலைபேசி எண்களில் தொடர்பு கொள்ளலாம்:

1. திருமதி அன்னம் நாராயண் —426598
2. திருமதி சியாமளா சேஷாத்ரி —420262

சென்னை—83, அன்னம் நாராயண்.

● எனது கவிதைகள் தங்களால் திருப்பி அனுப்பப்பட்டு வந்து சேர்ந்தன. துயரம் தாளாமல் இறைவன் முன் அழுதேன். அப்போது நான்கு வரி கவிதை என் மனத்தில் பளிச்சிட்டது.

அழுதாலே நெஞ்சின் சுமை குறையும் — நிலம்
உழுதாலே அதன் தரம் உயரும் — ஆல்
விழுதாலே பல்லாண்டு தழைத்தோங்கும்—
இறையைத்
தொழுதாலே வாழ்வில் வளம் பெருகும்!

வேலூர், அருள்மொழி.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது)

# பார்வையற்றோருக்கு உதவுங்கள்!




# எலுமிச்சை மணம் கமழும் முக சவரம்!



இப்போது! முக சவரத்தைப் புத்துணர்ச்சிகரமாக்குகிறது கோத்ரெஜ்.

எலுமிச்சை தரும் தளதளவென்ற புத்துணர்ச்சி. மென்மை மற்றும் இதம். அத்துடன் செழுமையான க்ரீம் கொண்ட நுரை. தினந்தோறும் காலையில் முகத்திற்கு ஓர் இன்பகரமான அனுபவம். ஒவ்வொரு நாளும். ஒவ்வொரு முறை சவரம் செய்யும்போதும்.




புத்தம்புது எலுமிச்சையின் நறுமணம். அத்துடன் நீங்கள் விரும்பித் தேர்ந்தெடுக்க சிக்ஃபோம் மற்றும் மென்தால் மிண்ட்.




CLARION/GS/6/203

# கண் தெரியாதவருக்கும் காந்தி தெரிகிறார்



**வ**ர்த்தக நிறுவனங்கள், தர்ம காரியங்களில் ஈடுபடுவதோ அறக்கொடைகள் நிறுவுவதோ புதிய செய்திகள் அல்ல. ஆனால் வோல்டாஸ் நிறுவனம், முற்றிலும் வித்தியாசமான ஒரு தொண்டு செய்ய முன் வந்திருக்கிறது.

காந்திஜியின் வாசகங்களில் முக்கியமானவற்றைத் தொகுத்து, சிவப்பு எழுத்துக்களும், பொன் எழுத்துக்களும் கொண்ட இருநூறு பக்க நூலாகத் தயாரித்து அதற்குப் பட்டுச் சட்டையும் போட்டிருக்கிறார்கள். முக்கியமான விஷயம் இனிமேல் தான் இருக்கிறது:

இந்த நூலை வாங்குகிறவர்களுக்கு ஒரு சலுகை கொடுத்திருக்கிறது வோல்டாஸ் நிறுவனம். இந்த நூலுடன், விழியற்றோர் வாசிப்பதற்கு வசதியாய், காந்திஜியின் அதே வாசகங்களை ப்ரெயில் முறையில் அச்சிட்ட நூலையும், ப்ரெயில் தகடும் எழுதுகோலும் வெகுமதியாகக் கொடுக்கிறார்கள். புத்தகம் வாங்குகிற அன்பர், இந்த ப்ரெயில் பரிசுகளை விழிப்பார்வையற்ற ஒருவருக்கு அன்பளிப்பாய்க் கொடுக்கலாம்.

நூல், பரிசு உட்பட நூற்றைம்பது ரூபாய் ஆகிறது. 'அடேயப்பா' என்கிறீர்களா? சென்னையில் தனிப்பட்ட ஒருவரே ஆறு நூல்களுக்கு மேலாக வாங்கி உதவியிருக்கிறார் என்னும் போது மறுபடி 'அடேயப்பா' சொல்லுங்கள்! எம். ஏ. தேறிவிட்டு, எம்ஃபில் படிக்கும் குமாரி கிரிஜா (படம்) பிரெயில் பரிசு தனக்குக் கிடைத்திருக்கிறது என்று தெரிந்ததும் முதலில் ஆச்சரியப்பட்டார். பிறகு நன்றியோடு புத்தகத்தைப் ''படிக்க'' ஆரம்பித்தார்.

-சித்தார்த்

படம்: சுபா

## ஒலிம்பிக் கவிதைகள்

—புவனசந்திரன்

### ஆசை

அன்னை பாரதத்தில்
அரசியலில் விளையாட்டும்
விளையாட்டில் அரசியலும்
அரிசியும் கல்லுமாக
இரண்டறக் கலந்த பின்னர்
என் அன்பு இந்தியனே
ஏன் உனக்கு மெடல் ஆசை?



### ஜாக்கி



இந்திய ஹாக்கி
இருளினை நோக்கி
போய்விட்ட பின்னர்
இனியென்ன பாக்கி
என்றமனத்தைத் தேற்றி
தூக்கி நிறுத்திய ஜாக்கி
உஷாவே போற்றி!

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani — Editor: K. Rajendran




# PHILIPS

## An exciting new composition. Arrangement by Philips.



The Philips Rack System is a perfectly compatible, technically superior and an aesthetic combination that brings you pure and powerful sound.



### 300 watts of undistorted power

That's AH 824. One of the best amplifiers available in the country today. With the most sophisticated features – like wide frequency response from 30 Hz to 20 kHz. Active tone control.

**The Electronic Turntable**

AF 834. Stroboscope with pitch control. Electronic motor control. And auto return.

**The Dolby Deck**

F 6121. The cassette deck with servo touch and metal compatibility.

**3 way 3 Speaker bass - reflex system**

AH 426 speakers with five segment LED bar graph to indicate power.

If music really means something to you, you've to listen to the Philips Rack System. Walk into the nearest Philips dealer's showroom and ask for a demonstration.

**Philips – the trusted Indian household name for over fifty years**

OBM/17 87

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

"தரத்தோடு விலையையும்
எம் மாதிரி நோட்டம்
பார்த்து வாங்குங்க,
கெட்டிக்காரி நீங்கதான்"







# "நியூட்ரமுல் தான் என் கைராசி."

"கண்ணை மூடிக்கிட்டு முடிவு பண்றவ நான் இல்லே. கண்முழிப்பா கவனிக்கறவளுக்குக் கிடைக்குது சகாய விலையிலே தரமான பண்டம்-- இதோ எனக்கு நியூட்ரமுல். ISI தரம் இருந்தாகணும், இருக்கா பார்ப்பேன். நியூட்ரமுல் ஒண்ணுக்குத் தானே அது இருக்கு, வேறெந்த கோக்கோ மால்ட பானத்துக்கும் கிடையாதே. அதுவும், குடும்ப மனசுப்போல வாங்கக் குடுத்து வெச்சவ நான், எங்க வீட்டுலே கண்டிப்பா நியூட்ரமுல் தான் வேணும்".

"விளம்பரக் கதைகள் எல்லாம் என் கண்ணுலே மண்ணைத் தூவும்படி விடமாட்டேன். எதையுமே நான் நேரிலே பார்த்துத்தான் வாங்குவேன்".




| | |
|---|---|
| நியூட்ரமுல் | ரூ. 13.34 |
| போர்ன்விடா | ரூ. 20.48 |
| மால்டோவா | ரூ. 20.45 |
| பூஸ்ட் | ரூ. 21.57 |

மார்ச் '84 நிலவரப்படி 500 கி.கா. டப்பின்களின் பேருகளுக்கான அறு போக உச்ச விலைகள். வரிகள் தனி.

daCunha/GCM/109(A)/84/TM